# DISTRICT HISTORY
# TANJORE




ஜில்லா சரித்திரம்

## தஞ்சாவூர்

~~49~~ 47

சென்னை ஆர்க்கியலாஜிகல் இலாகா

**P. V. ஜகதீச ஐயரால்**

எழுதப்பட்டு

சென்னை சட்டசபைத் தலைவர்

ம் திவான்பகதூர் L. D. சுவாமிக்கண்ணு பிள்ளை

அவர்கள் முகவுரையுடன்

கூடியது

[படங்களுடன்]

சென்னை :

குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1925

1925

# FOREWORD

I cannot commend too highly the educational value of this series of *gazetteers* in Tamil. I have been long wishing that the people of every to nd village should have ready to h complete guide to objects of lo nterest and particularly to local an uarian remains; and this series by ompetent archæologist like Mr. P. gadisa Aiyar will go far to fulfil siderratum.

*rt St. George,*
19-10-1924

L. D. SA



es
our
n for
insti-
and
he im-
cannot
of our
due to
ur la

# AUTHOR'S PREFACE

Love for one's own country and institutions is a virtue highly essential in all its citizens for its prosperity and well-being. Every attempt should be made therefore to cherish and cultivate this virtue by *one and all.* The study of the history of one's own country in general, and one's own district in particular, should perforce bring about the desired result in this direction. Here we may refer to the statement in the *Report of the fifteenth Provincial Educational Conference* of 1923. 'It is one of the fundamental principles of pedagogy that the History and Geography to be taught to the young should start with and be based on the study of the History and Geography of the district or region in which the pupil lives and be correlated to his actual daily experience.' It is the study of the History of our ancient times and ancient rulers that should rouse in our youths a feeling of reverence and esteem for our ancient rulers and their works and institutions.

Our youths, nay our countrymen and countrywomen too, seem to be under the impression that our land, unlike others, cannot boast of a history from the records of our rulers and historians. This is perhaps due to [illegible] fact that books on the history of our la[illegible] into their hands are those con[illegible] [illegible]rials culled by foreigners. Her[illegible] [illegible]out the fact that in our coun[illegible] [illegible] events of anc[illegible]

ancient rulers have been carefully preserved *imperishably* and *unalterably* in Epigraphical records on temple walls, copper-plate grants and so on.

Our present Government have collected and published in the *Gazetteers* of the districts and the *Reports of the Epigraphical* and *Archæological departments* a good deal of valuable historical information relating to each district, especially of ancient days and ancient rulers. From out of the facts based on these research works, a series of booklets containing summaries of historical events and other particulars of the various districts, is issued in vernaculars, for the use of our school-going boys and girls and this volume is one of them.

The plan adopted in compiling these booklets is that of giving particulars relating to the situation, people etc., of each district in the general introduction, the political history proper from the beginning up to the occupation by the British in chapter I, and the Gazetteer relating to the historically important places in chapter II. In the case of the Madras district alone, the history relating to the acquisition by the English of the various parts of the presidency is given in the introduction, the history of the city together with the founding of Fort St. George in chapter I and the various institutions useful to t[illegible] maintained by government and [illegible]dies, in chapter II.

P. V. JAGA[illegible]




# தஞ்சாவூர் ஜில்லா

---

## பூர்வபீடிகை

### (அமைப்பு முதலிய விவரங்கள்)

தஞ்சாவூர் ஜில்லா (படம் 1) சென்னை ராஜதானியின் தென்கிழக்குக் கரையி லிருக்கிறது. இதன் விஸ்தீரணம் 3727-சதுர மைல். வடக்கில் கொள்ளிடம் நதி. இதைத் திரிச்சிராப்பள்ளி, தென் ஆற்காடு ஜில்லாக்களிலிருந்து பிரிக்கிறது. மேற்கில் இது புதுக்கோட்டை சமஸ்தானம், திரிச்சிராப்பள்ளி ஜில்லா இவைகளாலும் தெற்கில் ராமநாதபுரம் ஜில்லாவினாலும் சூழப்பட்டிருக்கிறது. இதன் எல்லைக்குள் பிரெஞ்சுக்காரரைச் சேர்ந்த காரைக்கால் என்னு மிட மிருக்கிறது. இது கொள்ளிடம் நதியின் முகத்துவாரத்திற்கும் கோடிக்கரை என்ற காலிமிர் முனை (Point Calimere)க்கும் சமபாக இடையிலிருப்பதாகக் கூறலாம். இந்த ஜில்லாவிற்கு அதன் பெயர் வந்ததற்குக் காரணமாவது, தஞ்சன் என்ற ஓர் அரக்கன் தஞ்சாவூருக்கருகில் அலைந்து திரிந்துகொண்டு எல்லோருக்கும் தீங்கிழைத்து வந்ததின் நிமித்தம் மஹா விஷ்ணுவினால் கொல்லப்பட்டான், சாகுந் தருணத்தில் அவன் அந்நகருக்குத் தன் பெயரை இடவேண்டுமென்று வேண்டிக்கொண்டதின் மேல் அதற்கு அப்பெயரிடப்பட்டு அதைத் தலைமை நகர

மாகக்கொண்ட ஜில்லாவிற்குத் தஞ்சாவூர் ஜில்லா என்று பெயர் வந்ததாம். தஞ்சம்புகுந்த ஊரென்றும் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இந்தத் தஞ்சாவூர் ஜில்லா இப்போது 11 தாலூகாக்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது.

(1) தஞ்சாவூர்
(2) பாபநாசம்
(3) கும்பகோணம்
(4) மாயவரம்
(5) சீர்காழி
(6) நன்னிலம்
(7) நாகபட்டணம்
(8) மன்னார்குடி
(9) திருத்துறைப்பூண்டி
(10) பட்டுக்கோட்டை
(11) அறந்தாங்கி

இதன் ஜனத்தொகை 23,26,265. இதிலடங்கிய கிராமங்கள் 2,797.

இது ஒரு பெரிய வண்டல் பாங்கான பூமி. சமமாகவுள்ள நஞ்சை நிலங்கள் ஏராளமாக ஏற்பட்டிருக்கின்றன. தென்னந்தோப்புகளும் மாமரமும் இன்னும் அனேகவித மரங்களு மடர்ந்த தோப்புகள் முதலியனவும் இங்குண்டு. இது கொஞ்சம் கொஞ்சமாக சமுத்திரத்தை நோக்கிச் சரிந்திருக்கிறது. (சமுத்திரக்கரையை ஒட்டி ஏற்பட்டிருக்கும் சுறசலான மணல் திட்டைத் தவிர்த்.

இந்த ஜில்லாவில் எங்குமே இயற்கையான பீடபூமிப் பிராந்தியங்கள் ஏற்பட்டிருக்கவில்லை.

இந்த ஜில்லாவில் குன்றுகளே கிடையாது. எந்த பாகமும் சமுத்திர மட்டத்திற்கு 160 அடிக்குமேல் உயர்ந்திருக்கவில்லை. அதிக உயரம் வாய்ந்துள்ள பாகம் வல்லம் பீடபூமி.

நதிகள். காவிரியும் அதன் உபநதி கிளைநதிகளும் தான் இந்த ஜில்லாவின் முக்கியமான நதிகள். குடகுமலைகளில் உற்பத்தியாகி இந்நதி திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் சுமார் ஒன்பது மைல் தூரத்தில் இரு நதிகளாகப் பிரிகிறது. வடக்குப் பக்கத்தியது கொள்ளிடமென்று பெயர் வாய்ந்து செல்லத் தெற்குப்பக்கத்திய கிளை பழைய காவேரிநதி என்ற பெயருடனேயே ஓடுகிறது. மேற்கூறிய இடத்திலிருந்து 17-மைல்கள் ஓடினபிறகு இரு நதிகளும் அதிகப் பக்கமாக நெருங்கி ஓடிவந்து பிறகு கொள்ளிடம் வடகிழக்காகச் செல்லக் காவிரி தெற்கு நோக்கித் திரும்பி ஓடுகிறது. கொள்ளிடம் இந்த ஜில்லாவின் வட எல்லையின் ஓரமாகவே சென்று அதன் வடகிழக்கு எல்லைக் கோடியில் கொஞ்சமேனும் பிரவாகம் குறையாதபடி சமுத்திர சங்கமமாகிறது. காவிரி நதியோ வெனில் அதிலிருந்து செல்லும் அநேகம் கால்வாய்களின் வழியாகப் பயிர் செய்யத் தனது ஜலத்தை அனுப்பிக்கொண்டே ஓடி மிகவும் குறுகிப்போய் தரங்கம்பாடிக்கு வடக்கில் சுமார் எட்டு மைல் தூரத்திலுள்ள காவேரிப்பட்டினத்தில் சமுத்திரத்தில் விழுகிறது.

சீகாழியில் சூரபன்மனுக்கு அஞ்சி ஈஸ்வரனைநோக்கித் தவம்புரிந்த இந்திரன் நந்தவனம் மழையின்றிக் காய்ந்த காலத்தில் விநாயகரைப் பிரார்த்திக்கக் காவிரி உற்பத்தி செய்யப்பட்டதென்ற கதை சோழமண்டல சதகத்தில் தெரிவிக்கப் பட்டிருக்கிறது:—

பொன்பூத்த மலர்க்கொன்றை முடிப்பொழிமும்
மதத்துப் பொலிமருப்பு
மின்பூத்த கராசல முகத்துமேலோன்
சோழ விநாயகனே
தென்பூத்தருள் காவிரி பெருகச்செய்து
நாளுஞ் செழிப்பேற
வன்பூத்தழைந்து வளர்வதன்றோ வளஞ்சேர்
சோழ மண்டலமே.

* * *

அங்கார்பொழிய வருஞ்செழுநீ ரநந்தகோடி
நதிகளுக்குள்
இங்கார் நதிக ளோரேழும்
இசைக்கி லதிக மேழினுக்குங்
கங்காநதியே யதிகமதன் கன்மந் தொலைக்குங்
காவிரியே
மங்கா வதிக மெனு நாடு வளஞ்சேர்
சோழ மண்டலமே.

மற்றைய நதிகளுள் முக்கியமானது வெண்ணாறு எனப் படும் வெள்ளாறு. இது கோவிலடி என்னுமிடத்தில் காவேரி அணைகட்டிலிருந்து பிரிந்து தஞ்சாவூர், பாப நாசம், மன்னார்குடி, நன்னிலம், நாகபட்டணம் தாலூக் காக்கள் மூலமாய்ச் சென்று வேளாங்கண்ணிக்கு சமீபத்

தில் சமுத்திரத்தில் சேர்கிறது. இதற்கு வெட்டாறு என்னும் கிளை கள்ளப்பெரம்பூரண்டை உண்டாகித் தஞ்சாவூர், கும்பகோணம், நன்னிலம், நாகபட்டணம் தாலூக்காக்கள் வழியேசென்று நாகூருக்கருகில் சமுத்திரத்தில் விழுகிறது. மற்றொரு கிளையாகிய ஓடம்போக்கியாறு எண்கண் என்னுமிடத்தில் பிரிந்து நன்னிலம், நாகபட்டணம் மூலமாய்ப் போய்ச்சமுத்திர சங்கம மாகிறது. நீடாமங்கலத்தி னருகில் பாமணியாறு, கோரையாறு இவ்விரண்டும் ஏற்பட்டு மன்னார்குடி, திருத்துரைப்பூண்டி தாலூக்காக்கள் மூலமாய்ச் சென்று முத்துப்பேட்டையண்டை சமுத்திரத்தில் விழுகின்றன. கோரையாற்றிற்கு அரிச்சந்திரனுறு, முள்ளியாறு என்னு மிரண்டு கிளைகளு முண்டு.

காவேரியிலிருந்து பிரிந்து போகும் இதர சிற்றாறுகளெல்லாம் சோழராஜாக்களாலேயே, அவர்களது பட்டப் பெயர்களைக் கொண்டு ஏற்பட்டுப் பாய்ச்சலுக்கு அனுகூலமாக வெட்டப்பட்டவை. அவைகளுள் குடமுருட்டி திருக்காட்டுப்பள்ளியில் பிரிந்து தஞ்சாவூர், பாபநாசம், கும்பகோணம், நன்னிலம் தாலூக்காக்கள் மூல்யமாய் சென்று திருமலைராஜன், முடிகோண்டான் என்னும் கிளைகளை ஏற்படுத்திக்கொண்டு பின்னர் வெண்ணாற்றின் கிளையாகிய வெட்டாறுடன் சேருகிறது. திருமலைராஜன் பாபநாசத்தண்டை உண்டாகிக் காரைக்காலுக் கருகில் சமுத்திரசங்கம மாகிறது. அரசலாறு எனப்படும் ஹரிசொல்லாறு கபிஸ்தலத்தில் உண்டாகிக் கும்

லண்டை சமுத்திரசங்கம பாகிறது. வீரசோழன் திருவலஞ்சுழியில் ஆரம்பித்துக் கும்பகோணம், மாயவரம் தாலூக்காக்களில் ஓடித் தரங்கம்பாடிக்கருகில் சமுத்திரத்தில் விழுகிறது.

இந்த ஜில்லாவின் மண் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவைகளாவன: (1) வண்டல் நிலம், (2) இரும்புசேர்ந்த செம்மண் பூமி, (3) மணற்பாங்கான பாகம், (4) கருமண் நிலம்.

இந்த ஜில்லாவில் உலோகங்களே மிகக்குறை. இந்த ஜில்லாவின் மேற்குப் பீடபூமிகளில் நெடுக அகப்படும் பருக்கங்கல் பாறைகளில் வேண்டிய இரும்பு காணப்படுகிறதென்றாலும் அதை எடுக்க இரும்புக் கைத்தொழிற் சாலை யாதுமே ஏற்பட்டிருக்க வில்லை. விறகு சகாயமாகக் கிடைத்து, இக்கைத்தொழில் ஏற்பட்டால் லாபகரமானதாக இருக்கும் என்பதிற் சந்தேகமில்லை. வல்லத்திற்கருகில் "வல்லம் கற்கள்" எனப்படும் சிலவித கூழாங்கற்கள் அகப்படுகின்றன. அவைகளில் முக்கியமானவை (1) பளிங்கு அல்லது ஸ்படிகக்கல் (2) மதுவர்ணக் கல் (3) மஞ்சள் வர்ணக்கல் (4) செவ்வந்திக் கல் முதலியன. அவை தஞ்சாவூர் ஜில்லாவின் ரத்தின வியாபார வேலைக்காரர்களால் பற்பல ஆபரணங்கள் முதலியன செய்ய யோக்கியமானவைகளாகச் செய்யப் படுகின்றன.

சென்னை ராஜதானியில் தஞ்சாவூர் ஜில்லாவைக் காட்[illegible] திக ஜனத்தொகையுள்ள ஐந்து ஜில்லாக்க ளிருந்த

ஜில்லாவைப்போல் ஜனநெருக்கம் ஏற்பட்டிருக்கவில்லை. தஞ்சாவூர் ஜில்லாவின் ஜனத்தொகை சதுர மைலுக்கு 625-வீதம் ஏற்பட மற்ற எந்த ஜில்லாவிலும் அது 481-க்கு மேல் ஏற்பட்டிருக்கவில்லை.

பெரும்பான்மையான ஜனங்கள் பேசும் பாஷை தமிழே. ஆயினும் இந்த ஜில்லாவின் ஜனங்களில் முப்பதில் ஒரு பங்கு பேசுவது தெலுங்கு பாஷையெனக் கூறலாம். பல்லவ அரசர்கள் ஏழாவது நூற்றாண்டின் பின்னர் இத்தேசம் வந்ததும் தெலுங்கரைக் குடியேற்றினதாகச் செப்புப் பட்டயங்களால் வெளியாகிறது.

(மராத்தி பாஷை பேசும் ஜனங்கள் எந்த ஜில்லாவைக் காட்டிலும் இந்த ஜில்லாவில் அதிகம்.) பட்டுநூலி பாஷை பேசும் ஜனங்களும் அதிகமே. தெலுங்கு, மராத்தி, பட்டுநூலி பாஷைகள் இந்த ஜில்லாவின் பாஷைகள் அன்று தெலுங்கு பாஷை அது பேசிவந்த நாயக்கர்களாலும், மராத்தி அல்லது மஹாராஷ்டிர பாஷை மஹாராஷ்டிரர்களாலும் இந்த ஜில்லாவிற்குக் கொண்டுவரப்பட்டிருக்கக்கூடும். குஜராத்தி பாஷையின் ஒரு பிரிவாகிய பட்டுநூலி அல்லது கத்திரி பாஷை குஜராத்திலிருந்து வந்து இங்கு தங்கியிருக்கும் பட்டுநூல்காரர்களால் பேசிவரப்படும் பாஷை. மதுரை ஜில்லாவைத் தவிர வேறு எந்த ஜில்லாவிலுமே தஞ்சாவூர் ஜில்லாவிலிருக்கும் அவ்வளவு பட்டுநூல்காரர்களில்லை.

இந்த ஜில்லாவின் மொத்த ஜனத்தொகையில் விவசாயம் செய்து ஜீவிக்கும் பாகம் அதிகமாகக் குறைந்

திருப்பதுபோல் இந்த ராஜதானி ஜில்லாக்களிலேயே மூன்று ஜில்லாக்களைத் தவிர வேறு ஜில்லாக்களில் ஏற்பட்டிருக்கவில்லை. கைத்தொழிலினல் ஜீவிப்பவர்களது சங்கியையும் அதிகமே. சென்னையைத் தவிர்த்து வேறெங்குமே இந்த ஜில்லாவி லிருப்பதுபோல் வேலை செய்து ஜீவிப்பவர்களது தொகை அதிகரித்திருக்கவில்லை. இந்த ஜில்லா பணம் பெருத்ததுமன்றி ஜனங்கள் சாதாரணமாகப் படித்தவர்களில் வியாச்சிய விகாரங்களில் ஊக்க முள்ளவர்கள்

பத்தில் ஒன்பது பங்கு ஜனங்கள் ஹிந்துக்கள். நூற்றுக்கு ஐந்து முகம்மதியர்களும் நான்கு கிறிஸ்தவர்களுமிருப்பதாகக் கணக்கேற்பட்டிருக்கிறது.

விளையாட்டுகள்:—எல்லா ஜாதியார்களாலும் அனேக விதமான ஆட்டங்கள் ஆடப்பட்டு வருகின்றன. அவைகளில் முக்கியமானவை புளியங்கொட்டை முதலியவை வைத்துக்கொண்டு சிறுவர் சிறுமிகள் "ஒத்தையோ இரட்டையோ?" என்ற ஆட்டம் ஆடுவது. "கட்டுக்கண்ணும்பூச்சி," "நிலாப்பூச்சி நிழல்பூச்சி," "கட்டம்," "கிட்டுப்புள்ளு," "பச்சைக்குதிரை," "பலிஞ்சடுகுடு," "கோலாட்டம்," "அம்மானை," "அச்சாப் பொங்கல்" முதலியன முக்கியமானவை.

தஞ்சாவூர் ஜில்லாவில் அனேகமடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளில் சைவமடாதிபதிகளின் கீழுள்ளவைகளுள் தர்மபுர மடம், திருவாடுதுறை மடம், திருப்பனந்தாள்மடம் முக்கியமானவை. கும்பகோணத்தில் ஸ்மார்த்

ப் பிராமணர்களுக்கு முக்கியமான சங்கராசாரியாரது டமிருக்கிறது. இது காஞ்சிமாநகரிலிருந்து இவ்விடத்தில் தஞ்சை மஹாராஷ்டிர மன்னர் பிரதாபசிங்கு காலத்தில் மாற்றப்பட்டது.

இந்த ஜில்லாவின் முக்கியமான விளைபொருள் நெல். காடுகள் மிகவும் ஸ்வல்பம். பொதுவாக பூமி மணற்பாங்காக ஏற்பட்டிருப்பதால் நிறுத்திவைக்கப்பட்டுள்ள காடுகளிலும் உயர்ந்த ஜாதிமரங்கள் வளர்ந்திருப்பதில்லை. விவசாயத்தினால் ஜீவிப்பவர்கள் நூற்றுக்கு அறுபத்தைந்துபேர் இருக்கலாம். இத்தொகை மற்ற ஜில்லாக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்துக் குறைவானதே. இந்த ஜில்லா நெசவுக்குப் பேர்போனது. இந்த ஜில்லாவில் நெய்த நேர்த்தியான துணிகள் முதலியன சென்னை மியூசியத்தில் வைக்கப்பட்டிருக்கக் காணலாம். பட்டுநெசவு கும்பகோணத்திலும் தஞ்சாவூரிலும் பட்டுநூல் காரர்களால் செய்யப்பட்டுவருகிறது. புடவைகள் அனேகவிதங்கள் அனேகவிடங்களில் நெய்யப்படுகின்றன, தஞ்சாவூர் கும்பகோணம் முதலான இடங்களில் நெய்யப்படும் உயர்ந்த பீதாம்பரம் என்ற புடவைகள் நூறு நூற்றைம்பது ரூபாய் கூட விலையாகின்றன. அய்யம்பேட்டை கம்பளங்களுக்குப் பேர்போன ஊர். குத்தாலம், கொறநாடு (கூறை நாடு) முதலிய இடங்கள் ஒருசமயம் புடவைகளுக்குப் பெயர் பெற்றிருந்த போதிலும் இப்பொழுது அனேக இடங்கள் ஏற்பட்டு நல்ல புடவைகள் நெய்து விற்பனை செய்யப்பட்டு வருகின்றன.

சென்னை ராஜதானியில் பண்டைக்காலம் தொடங்கி நாகரீகம் வாய்ந்துள்ள இடங்களில் தஞ்சாவூர் ஒன்று. சங்கீத சாமான்கள் செய்வதில் தஞ்சாவூர் வேலைக்காரர்களிற் பலர் பிரக்கியாதி பெற்றிருத்தல்பற்றி அவைகள் வெளி ஊர்களுக்கு அனுப்பப்படுவதுமன்றி வெளியிடங்களிலிருந்து ஜனங்கள் ஏராளமாக அங்குவந்து அவைகளை வாங்கிக்கொண்டு போகிறார்கள். அத்தகைய சங்கீத சாமான்களில் முக்கியமானவை "தம்பூர்," "மிருதங்கம்," "சாரந்தா" முதலியன. இவைகளுள் தம்பூர் செய்து முடிக்க அதிக சாமார்த்தியம் வேண்டும்.

தச்சர்கள் மரத்தில் சித்திரவேலைகள் செய்வதில் தேர்ந்திருக்கிறார்கள். முக்கியமாய்த் தேர்கள் செய்வதில் தான் அவர்களது கைத்திறம் காட்டப்பட்டிருக்கிறது. தஞ்சாவூர், மன்னார்குடி, திருவாரூர், திருவிடைமருதூர் முதலான இடங்களிலுள்ள தேர்களில் அவர்களது வேலைப்பாடுகளைக் காணலாம். மேற்கூறிய தச்சர்களது தூண்கள், அரிகால்கள், ஜன்னல்கள் முதலியவைகளில் ஏற்படும் சித்திரவேலைகளும் வியக்கத்தக்கனவே. தஞ்சாவூரிலுள்ள சில கம்மாளர்கள் உலோகங்களிலும், தந்தத்திலும் சிறிய விக்கிரகங்கள் செய்து விற்கிறார்கள். பெரிய கருங்கற்சிலைகள் செய்யக்கூடியவர்களு முண்டு. முக்கியமான இந்த ஜில்லாவின் கைத்தொழில்கள், நெசவு, துணிகளுக்குச் சாயம் போடுதல், பாய்கள் நெய்தல், பித்தளைப் பாத்திரம், வெங்கலப் பாத்திரம், செம்புப் பாத்திரம், வெள்ளிப் பாத்திரம், தங்கநகைகள், கல்நகைகள் முதலியன செய்தல்

கயிறுதிரித்தல், எண்ணெய் ஆட்டுதல், தோல்பதனிடுதல், சட்டைகள் செய்தல், வளையல்கள்செய்தல் முதலியன.

இந்த ஜில்லாவில் இருப்புப்பாதைகள் நான்கு ஏற்பட்டுள்ளன. பழைய ஈரோடு நாகபட்டணம் இருப்புப்பாதை நாகப்பட்டணத்தைத் திரிச்சிராப்பள்ளியுடன் சேர்த்தது. தூத்துக்குடியிலிருந்து சென்னைக்குச் செல்லும் இருப்புப்பாதை திரிச்சிராப்பள்ளியின் வழியாகச் செல்லுகின்றது. இந்த ஜில்லா போர்டு இருப்புப்பாதை தெற்கு நோக்கி மாயவரத்திலிருந்து அறந்தாங்கி வரை நாகபட்டணம் இருப்புப்பாதையைக் கடந்து செல்கிறது. ஒரு கிளை நாகூரையும் நாகபட்டணத்தையும் சேர்க்க இன்னொரு கிளை ஜில்லா போர்டு இருப்புப்பாதையைப் பேரளத்தில் காரைக்காலோடு சேர்க்கிறது. மற்றொன்று திருத்துறைப்பூண்டியிலிருந்து வேதாரண்ணியம் செல்லுகிறது; நீடாமங்கலத்திலிருந்து ஒரு கிளை பிரிந்து மன்னார்குடி வரை போகிறது. இந்த ஜில்லாவில் மாயவரம் முத்துப்பேட்டை இருப்புப்பாதை 1894-வது வருஷத்தில் ஜில்லா போர்டால் ஏற்படுத்தப்பட்டது.

இந்த ஜில்லாவில் பொழியும் மழையின் பெரும்பாகம் வடகிழக்குப் பருவக்காற்று மழையே. ஆனால் சிற்சில காலங்களில் தென்மேற்குப் பருவக்காற்றின் மழையும் பலமாக ஏற்பட்டுவிடுவது உண்டு.

இந்த ஜில்லாவில் பெரும்பாகம் மழை பொழிந்தாலும் பொழியாவிட்டாலும் காவேரி நதி பாய்வதால் ஜலக்கஷ்டம் நேர்ந்து நிலங்கள் விளையாமற்போவது அபூர்-

வம். தஞ்சாவூர் பட்டுக்கோட்டைத் தாலூக்காக்களின் சில பாகங்களில் காலாகால மழையின்றி மாசூல் தவறிப் போவதுண்டு. அங்கும் கூடப் பஞ்சம் ஏற்படக் காரண மில்லை. எனெனில் அருகிலுள்ள செழுமையான நிலங் கள் உதவி புரிகின்றன; வேலையும் அகப்படக்கூடிய இடங் கள். சென்ற 1924-ம் வருஷத்தில் காவேரியின் ஜலப் பெருக்கினல் நேரிட்ட வெள்ளத்தினல் அதிகச் சேதப் நேரிட்டது.

சீதோஷ்ண நிலமையிலோ தஞ்சாவூர் ஜில்லா உஷ்ணமானதும் தேகத்தளர்ச்சியை உண்டாக்கக்கூடியது மானதெனினும் ஆரோக்கியமானதே. ஆயினும் காலரா, பெரியம்மை இவ்விரு வியாதிகளும் தஞ்சாவூரில் அனேக ஜனங்கள் மாண்டதற்குக் காரணமாம். காலராவுக்குக் காரணம் பூமியின் இயல்பும் நீருமென்பது சிலர் அபிப் பிராயம். சிலர் வேலை செய்து பிழைக்கும் ஜாதியார்களின் எழ்மையும் அவர்களது அசுத்தமான விடுதிகளுமென்று கூறுகிறார்கள். இன்னும் சிலர் இந்த ஜில்லாவிலும் திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலும் நடந்தேறும் திருவிழாக் களுக்கு அனேகம் யாத்திரிகர்கள் வந்து கூடுவதே இத் தொத்து வியாதிக்குக் காரணம் என்கிறார்கள். இந்த வியாதி ஜனவரி பிப்பிரவரி மாதங்களிலேயே உக்கிரமாக எற்படுவதால் புதுத்தானியங்கள் அதற்குக் காரணம் என் பது சிலர் அபிப்பிராயம். டிசம்பர் மாதக் கடைசியில் ஸ்ரீரங்கத்திலும், சிதம்பரத்திலும் பெரிய உற்சவங்கள் நடந்தேறுவதால் அதற்காகக் கூடும் யாத்திரிகர்களால் இங்

நோய் கொண்டுவரப்பட்டு அவர்கள் அவ்விடங்களி லிருந்து தஞ்சாவூருக்குப் போகையில் அங்கு ஏற்பட்டுத் தேச இயல்பினாலும், ஜலத்தின் கெடுதியினாலும் எளிதில் நீங்காது பலரது மரணத்திற்குக் காரணமாகிற தென்பது சாதாரணமாக எல்லாராலும் ஒத்துக்கொள்ளத் தக்கதே.

இந்த ஜில்லாவிலுள்ள லோகல் போர்டுகளாலும் முனிஸிபாலிடிகளாலும் வைத்துப் பராமரிக்கப்பட்டு வரும் ஆஸ்பத்திரிகள், மருந்துகள் மாத்திரம் கொடுக்கும் ஆஸ்பத்திரிகள் (Dispensaries) அநேகம். தற்காலத்தில் தஞ்சாவூரிலிருக்கும் ராஜா மிராசுதார் ஆஸ்பத்திரி 1897-வது வருஷத்தில் எச். எஸ். தாமஸ் என்ற கலெக்டர் துரை அவர்களால் அஸ்திவாரக்கல் போடப்பட்டுக் கட்டி முடிவுபெற்றது. 1876-77-வது வருஷங்களின் கொடிய பஞ்சத்தினின்றும் காக்கப்பட்டதற் கறிகுறியாக மிராசுதார் களிற் பலர் கொடுத்த பொருளைக்கொண்டும் சரபோஜி மஹாராஜாவின் தர்ம கைங்கரிய முதலிலிருந்து கொடுக் கப்பட்ட 30,000 ரூபாயைக் கொண்டும் சுமார் 70,000 ரூபாய்ச் செலவில் இது கட்டி முடிக்கப்பட்டதாம். இந்த ஆஸ்பத்திரிக்குச் சேர்ந்துள்ளது வேல்ஸ் இளவரசர் வைத்தியக் கலாசாலை. 1880-வது வருஷத்தில் ஜனங் களிடமிருந்து பணம் வசூல்செய்து அப்பொழுது வேல்ஸ் இளவரசராக விருந்து இப்பொழுது நமது சக்ரவர்த்தி யாகவும் இங்கிலாந்து தேசத்தின் அரசராகவு மிருக்கும் ஜார்ஜ் மன்னர் நம் நாட்டிற்கு 1875-வது வருஷத்தில் விஜயம் செய்ததின் அறிகுறியாக இது ஏற்பட்டது. இக்

George was not Prince of Wales in 1880
Edward was Prince of Wales till 1901 George

கலாசாலைக்கு ஒரு லக்ஷம் ரூபாய் மூலதன மிருக்கிறது. அது சர்க்கார் வட்டிப்பத்திரங்களில் போடப்பட்டிருக்கிறது. 1905-வது வருஷம் ஜூலை மாதம் முதல் தேதி வரைக்கும் அது ஜில்லா போர்டுச்செலவில் நடத்திவரப்பட்டு வந்தது. இப்பொழுது அது சர்க்காராலேயே நடத்திவரப் படுகிறது.

இந்த ஜில்லா படிப்பில் சிறந்தது. படிப்பிற்காகத் தஞ்சாவூர் ஜில்லாவில் செலவிடப்படுவதைக் காட்டிலும் அதிகமாகச் செலவிடப்படும் ஜில்லாக்கள் சென்னை செங்கல்பட்டு ஜில்லாக்களே. அதற்காகக்கிடைக்கும் வருமானத்தைக்கொண்டே நடத்திவரப்படும் அனேகம் கல்விசாலைகள இந்த ஜில்லாவில் உண்டு. இந்த ஜில்லாவில் கைத்தொழிற் சலாசாலைகள் அநேகம் ஏற்பட்டிருப்பது ஒரு விசேஷம். கும்பகோணத்தில் ஏற்பட்டு நடந்தேறிவரும் உயர்தரக் கல்லூரி சர்க்காரால் நடத்திவரப் படுகிறது. மாணவர்கள் சாப்பிடக்கூடிய (Hostel) ஹாஸ்டல் இதற்குச் சேர்ந்ததாக ஏற்டுத்தப்பட்டிருக்கிறது.

இந்த சர்க்கார் கல்லூரியைத் தவிர வெஸ்லியன் மிஷனால் நடத்திவரப்படும் இன்னொரு உயர்தரக் கல்லூரியும் இந்த ஜில்லாவில் மன்னார்குடியில் பின்லே கல்லூரியென்ற பெயருடன் நடந்து வருகிறது. தவிர தஞ்சாவூரில் செயிண்ட பீட்டர்ஸ் கல்லூரி என்ற ஒரு இரண்டாந்தரக் கல்லூரியும் இருக்கிறது.

# அத்தியாயம் 2

## தேச சரித்திரம்

தஞ்சாவூர் ஜில்லாவின் பூர்வீக சரித்திரம் சோழர்களைப் பற்றிய விஷயங்களே எனக் கூறலாம் இங்கு சோழர்கள் வருமுன் நாக வமிசத்தினர்கள் குடியேறியிருந்த விஷயம் புராதனத் தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது. காலத்திய கள்ளர்கள், மறவர்கள் முதலிய ஜாதியார்கள் முன்னோர்களே அந்த நாக வமிசத்தினர். சோழர்களோ தென்னாட்டைத் தங்களுடன் பகிர்ந்தனுபவித்த சேர, பாண்டியர்களைப்போலவே இந்நாட்டில் ஆதி காலம் முதல் இருந்தவர்கள். ஆராய்ச்சி செய்து பார்க்குங்கால் இந்த ஜில்லாவைப்பற்றி முதல் முதல் ஏற்படுவது இதன் பெரும்பாகம் சோழர்களது ஆதீனத்தின்கீழ் இருந்ததென்பதே. விட்டு விட்டுப் பதினான்காம் நூற்றாண்டு வரைக்கும் அது அவர்களுக் குட்பட்டிருந்தது. தஞ்சாவூர், காவேரிப்பட்டணம், கும்பகோணம் முதலான இடங்கள் அவ்வரசர்களது வாஸ ஸ்தலங்களாக ஏற்பட்டிருந்தன. அவர்களது பெருமைக் கறிகுறியான சின்னங்கள் நாடு முழுவதிலும் ஏற்பட்டிருக்கின்றன. இச்சோழ நாட்டு எல்லையைப்பற்றிக் கம்பர் கூறுவதாவது:—

கடல் கிழக்குத் தெற்குககரை பொருவெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக்கரையாம்—வடதிசையில்
ஏணுட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதம்
சோணுட்டுக் கெல்லை யெனச் சொல்''.

சோழமண்டல சதகத்தில் சோழ நாட்டெல்லையைப் பற்றி:—

செல்லுங் குணபாற் றிரைவேலை
தென்பாற் செழித்த வெள்ளாறு
வெல்லுங் கோட்டைக் கரைவிளங்கு
மேல்பால் வடபால் வெள்ளாறே
யெல்லையொரு நான் கினுங்காத
மிருபா னுன்கு மிடம்பெரிதா
மல்லல்வாழ்வு தழைத்தோங்கும்
வளஞ்சேர்சோழ மண்டலமே.

கி. மு. 250-லேயே சோழராஜியம் ஏற்பட்டிருந்த தென்பது மௌரிய வமிசத்தைச் சேர்ந்த பௌத்த அரசர் அசோகர் என்றவரது ராஜசாஸனப் பிரகடனங்களால் ஊர்ஜிதமாகிறது. மேற்கூறியுள்ள காலத்துக்கு முன்னரே ஏற்பட்டிருக்க வேண்டுமென்பதும் தமிழ் கிரந்தங்களால் ஏற்படுகின்றன. அசோகசக்கரவர்த்தியினது பிரகடனங்கள் சோழ, பாண்டியர்களது நாட்டில் தாம்பிரபரணி நதிவரைக்கும் அவரது ஜயம் பரவியிருந்ததென்பதைக் காட்டி யிருக்கின்றன. ஆனல் இந்த பாகம் அசோக சக்கரவர்த்தியினுலும் கீழ்ப்படுத்தப் படவில்லை. மத்திய இந்தியாவில் மௌரியர்களுக்குப் பிந்தி வந்து பிரக்கியாதி பெற்றிருந்த ஆந்திரர்களாலும் அடக்கப்படவில்லை. கிறிஸ்தவ சகாப்

தத்தின் ஆரம்பத்தில் இந்நாட்டின் நிலைமையும் விஷயங்களும் எவ்வாறு இருந்தன என்பதைப்பற்றிப் பண்டைக் காலத்திய கவிகளாலும் இலங்கைக் கிரந்தங்களாலும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அக்காலத்திய நாட்டையும் ஜனங்களையும்பற்றி அந்நூல்கள் கூறியுள்ளவை மிகவும் தெளிவாகவே யிருக்கின்றன. இச்சோழ தேசத்தின் தென்பாகம் நாகபட்டணத்தைத் தலைமை நகரமாக்கிக் கொண்டிருந்த நாக பரம்பரையாரது ஒரு பிரிவினரின் ஸ்வாதீனப் பட்டிருந்தது.

சோழ மன்னர்களது தலைமை நகரம் உறையூர். ஆனால் அதைவிடச் சிறப்புப் பெற்றிருந்த விடம் காவேரி நதியின் முகத்துவாரத்திலுள்ள காவிரிப்பூம்பட்டணம். அது அப்பொழுது ஒரு பெரிய முக்கியமான துறை முகப் பட்டணமாக ஏற்பட்டிருந்தது. சோழநாட்டுக்குப் "புனல்நாடு" அல்லது நீர் நாடென்ற பெயரும் உண்டு. அது அப்பொழுது தஞ்சாவூர் திரிச்சிராப்பள்ளி ஜில்லாக்களின் பெரும் பாகத்தை அடக்கிக் கொண்டிருந்ததுமன்றி வடக்கில் காஞ்சிபுரத்திற் கப்பாலும் பரவியிருந்தது. அதன் மேற்கிலும் தென்மேற்கிலும் பாண்[illegible]சேர நாடுக ளிருந்தன. மேற்கூறிய மதுரைப் பாண்டியர்களுடன் தஞ்சாவூர் அரசர்கள் அனேக நூற்றாண்டுகள் போர்புரிந்து வந்தனர். மேற்கூறிய நாடுகளின் எல்லைகள் நிச்சயமாகக் கூறுதல் முடியாது. அடிக்கடி நேரிட்டு வந்த சண்டைகளில் அவை அடிக்கடி மாறிக் கொண்டே வந்திருக்க வேண்டும்.

ஒளவையார் அருளிச் செய்துள்ள பாக்கள் ஒன்றில் சோழநாட்டின் எல்லை கிழக்கில் சமுத்திரம் என்றும், வடக்கில் பெண்ணையாறு என்றும் தெற்கில் வெள்ளாறு என்றும் மேற்கில் கோத்தகிரியென்றும் கூறப் பட்டிருகின்றது. பெண்ணையாறு கூடலூருக் கருகில் சமுத்திர சங்கமமாகிற தென்பதும் வெள்ளாறு தெற்கு ஓரத்திற் கருகில் ஓடுகிற தென்பதும் எல்லோருந் தெரிந்த விஷயம். கோட்டைக்கரை யென்ற இடம் திரிச்சிராப்பள்ளி ஜில்லாவில் இப்பொழுதும் காணப்படும் அக்காலத்திய பெரிய அணையே யாகும். இதிலிருந்து அக்காலத்தில் சேர, சோழ, பாண்டியர்கள் என்ற மூன்று அரசர்களது ஆட்சிகள் ஏற்பட்டிருந்தது தெரிகிறது. அவ்வரசர்களும் வீரர்களுக்கிருக்க வேண்டிய அதிக சிலாக்கியமான குணாதிசயங்கள் வாய்ந்திருந்தார்கள். சேர நாட்டரசன் ஒருவன் சோழ அரசன் ஒருவனுடன் போர்புரிந்து கொண்டிருக்கையில் முதுகில் காயம் பட்ட அவமானத்தைச் சகிக்க முடியாது பட்டினி கிடந் திறந்தனனும். தேச அபிவிருத்திக்கு வேண்டிய விஷயங்களும் அவர்களால் அலக்ஷியம் செய்யப் பட்டிருக்கவில்லை. அவர்கள் விவசாயத்திற்கு வேண்டிய பல வேலைகளைச் செய்துமுடித்துக் கவிகளது புகழ்ச்சியைப் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் [illegible]த்தில். ஏராளமாக வியாபாரமும் நடந்ததாம்.

ஆதலின் அவர்கள் சுகபோகங்களிலும் நாகரீகத்திலும் விருத்தி யடைந்திருந்தது ஆச்சரியமன்று. மேற்கூறிய இரண்டு விஷயங்களையும் ஊர்ஜிதப்படுத்தக் கவிகள் ஏரா[illegible]

மாக ஏற்பட்டிருக்கக் காணலாம். தேசத்தில் இந்த பாகத்தின் இக்காலத்திய பூர்வீக சரித்திரத்தைக் கவிகள் அதிகத் தெளிவாகவும் விவரமாகவும் வர்ணித்திருக்கிறார்கள்.

சோழ மன்னர்களது சரித்திரத்தில் முதல் முதல் தெளிவாகச் சரித்திரம் ஏற்பட்டிருப்பது பிரக்கியாதி பெற்ற கரிகால சோழனுக்குத்தான். அவனது காலம் கி. பி. 50-வது வருஷம் முதல் கி. பி. 95-வது வருஷம் வரை என்று ஏற்பட்டுளது. அவனுக்குக் கரிக்கால சோழனென்ற பெயர்வந்ததற்கு ஒரு காரணம் சொல்லுகிறார்கள். அவனை நெருப்பிட்டுக் கொல்ல முயற்சி செய்யப்பட்டதாம். அம்முயற்சி நிறைவேறவிடினும் அவனது கால்கள் நெருப்பினால் பொசுக்கப்பட்டுக் கருத்துப் போய்விட்டனவாம். கரிபோல் ஆன கால்களுடன் கூடியிருந்த காரணம் பற்றிக் கரிக்கால் சோழனென்ற காரணப்பெயர் பெற்றனன். மேற்கூறியுள்ள சோழன் பிறக்குமுன் தகப்பனை இழந்திருந்த காரணம்பற்றிச் சிங்காசன மேறத் தடை ஏற்பட்டது. ஆரம்பத்திலிருந்தே அவன் ஜயலக்ஷ்மி கருணை பெற்றிருந்த வீரனெனக் கூறத் தடையில்லை. பாண்டிய, சேர அரசர்களது ஒன்று சேர்ந்த சைனியத்தை அவன் அவனது முதல் யுத்தத்தில் வெண்ணில் (கோவில்வெண்ணி) சமவெளியில் தோற்கடித்தான். இந்தயுத்தத்தில்தான் சேர தேசத்திய மன்னனுக்கு முதுகில் காயம்பட்டது. அதனால் நேர்ந்த அவமானத்தைச் சகிக்கமாட்டாமல்தான் அவனும் பட்டினி கிடந்திறந்தான். இக் கரிக்கால சோழன் நாக வமிசத்தவர்களுள் சில பிரிவினர்களை ஒடுக்

இனதுமன்றிச் சில குரும்ப அரசர்களையும் ஒடுக்கினனும். அவந்தி நாட்டரசனது நண்பனென்றும், வச்சிர, மகத தேசாதிபதிகளின் அதிபதியென்றும் அவன் கூறப்பட்டிருக்கிறான். அவனது மகள் சேர தேசத்திய அரசனது மனைவியான விஷயம் தெரிகிறது. அவனும் பாண்டிய நாட்டரசனும் சந்தித்து நட்புப் பாராட்டி நடந்துகொண்டார்கள். அவன் காலத்தில் விவசாயத்திற்குச் சாதகமான கலிங்குகளும், மதகுகளும், காவேரிநதி பாயுமிடங்களில் ஏற்பட்டிருந்தன. அவைகளை அவனே கட்டி முடித்திருக்கலாம். நதி கரைபுரண்டு நாட்டில் ஓடாமல் தடுக்கக் கருங்கல்லால் கரைகள் போட்டவனும் அவனே. காவேரிப் பட்டினத்தில் சோழ ராச்சியத்தின் தலைமை நகரை ஸ்தாபித்தவன் கரிக்கால் சோழனாக இருக்கக்கூடும்.

அவனுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்தவன் அவனது மகன் நலன்கிள்ளி. அவன் கி. பி. 105-வது வருஷம் வரையில் ஆண்டான். கற்றுத் தேர்ந்தவனும், நற்குல நற்செய்கைகள் வாய்ந்தவனும், உயர் பதவியைக் கோரினவனுமுள்ள இவ்வரச குமாரன் அடிக்கடி சேரபாண்டியர்களுடன் போராடுவதில் முயற்சி வாய்ந்தவனாகவிருந்தான். அவன் பாண்டிய ராச்சியத்தில் ஏழு அரண்களுடன் கூடிப் பலம் வாய்ந்திருந்த நகரங்களைப் பிடித்துக்கொண்டதாகக் கூறப்பட்டுளது. ஆனால் இது அவனது ராச்சியத்தை ஸ்திரமாகப் பெரிதாக்கினதாக ஏற்படவில்லை. தன்னைப்பற்றியும் தனது சாமர்

தியத்தைப் பற்றியும் அவனுக்கு உயர்ந்த அபிப்பிராயம் ஏற்பட்டிருந்ததாகத் தெரிகிறது. ஏனெனில் அவன் இயற்றிய பாட்டுகள் ஒன்றில் "பராக்கிரமசாலியாகிய எனது பலத்தை அலக்ஷியம் செய்து என திஷ்டத்திற்கு விரோதமாக நடந்துகொள்ள முயலும் மௌட்டியன் தூங்கும் புலியின்மேல் இடறி விழுந்தவனது கதியை அடைவது திண்ணம்" எனக் கூறியுளன். தவிரவும் அத் தகையவர்களை அவன் மூங்கில் குருத்தை யானை காலால் மிதித்து நாசம் செய்வதுபோல் நாசம் செய்துவிடவும் கூடுமென்று கூறியிருக்கிறான். அவனுக்குப் பிறகு அவனது மகன் கிள்ளிவளவன் கிரமமாய்ப் பட்டத்திற்கு வந்து, ராஜ்ஜியத்தைப் பகிர்ந்துகொள்ள வேண்டுமெனக் கூறிக் கலகம் செய்த ஒன்பது அரசகுமாரர்களை அடக்கின விஷயம் ஏற்பட்டுளது. அவன் சேர, பாண்டிய அரசர்களு டன் சண்டை செய்யவேண்டியது அவசியமாக நேரிட அதில் அவனுக்குக் கொஞ்சம் ஜெயம் ஏற்பட்டிருந்த தெனக் காண்கிறது. ஏனெனில் அவன் அவர்களிருவர் களது தலைமை நகரங்கள் வரையில் சென்றிருந்ததாகக் கூறப்பட்டுளது. தவிரவும் அவன் தென் ஆற்காடு ஜில்லா விற்கு மேற்கிலுள்ள குன்றுகளடர்ந்துள்ள திருக் கோயிலூர் சமீபமுள்ள மலாடு என்ற பெயர் வாய்ந் திருந்த நாட்டின் அரசனைக் கொன்றதாகவும் கூறி யிருக்கிறார்கள். இக்காலத்தில் இந்நாடு சோழ மன்னர் களுக்குச் சேர்ந்திருந்ததால் நாம் மேலே கூறியுள்ள படை யெழுச்சியின் முடிவாகத்தான் அச்சம்பவம் ஏற்பட் [illegible]க்கூடும். கிள்ளிவளவனது முதல் தாரம் லங்கைத்

தீவின் அரசனது குமாரிகளுள் ஒருத்தி. அவனுக்குப் பிறகு அவனது சகோதரன் பெருநற்கிள்ளி என்றவன் பட்டத்திற்கு வந்து கி. பி. 150-வது வருஷம் வரையில் ஆண்டான். அவன் "ராஜசூய யாகம்" செய்து அதற்குச் சேர, பாண்டிய மன்னர்களை அழைத்திருந்தான் என்றதைத் தவிர்த்து, அவனது செய்கைகள் வேறு யாதொன்றுமே தெரியவில்லை.

புராதன லிகிதங்களிலும் கவிகளிலும் குறிக்கப் பட்டுள்ள இன்னும் இரண்டு சோழ மன்னர்களது பெயர்கள் கூறப்பட்டுள்ளது. அவர்களுள் ஒருவனுன கோச்செங்கண்ணன் அனேக விஷ்ணு கோவில்களையும், சிவன்கோவில்களையும் கட்டிவைத்த விஷயம் கவிகளிலிருந்து ஏற்படுகிறது. சிலா லிகிதங்களில் அவன் சிவபக்தனும் விஷ்ணு பக்தனும் எனக் கூறப்பட்டுளது. கோக்கிள்ளி என்ற ஓர் அரசன் நாக வமிசத்திய அரசகுமாரி ஒருத்தியை மணந்து அவளிடம் தொண்டமான் இளந்திரையன் என்ற மகனைப் பெற்றிருந்தான். அவனுக்கு அரசன் வட ஆற்காடு, செங்கல்பட்டு, தென் ஆற்காடு ஜில்லாக்கள் அடங்கி யுள்ள தொண்டமண்டலம் என்ற நாட்டை அளித்ததாகக் கூறியுள்ளர்.

பல்லவர்கள் கொஞ்ச காலத்திற் கெல்லாம் சோழ மன்னர்களை ஒடுக்கித் தொண்டைமண்டலத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தவர்கள் மத்திய வட இந்தியாவிலிருந்து படையெடுத்து வந்தவர்கள். தொண்டைமான் என்ற பெயர் அவர்களது புராதனமான பட்டம். அ[illegible]ல்

தொண்டைமண்டல மென்ற பெயர் செங்கல்பட்டிற்கும் அத னருகிலுள்ள ஜில்லாக்களுக்கும் அளிக்கப்பட்டிருந் தது போலும். இதுவே தெற்கில் ராஜ்ஜியத்திற்கு அஸ்தி வாரமாக பிந்திய ஸ்தாபிதமான அவர்களது ஏற்பட்ட விடம்.

தமிழ் நூல்களில் உறையூரில் ஆண்ட இன்னும் பல சோழ மன்னர்களது பெயர்கள் எடுத்துக்காட்டப்பட் டிருக்கின்றன. ஆனல் அவர்களைப் பற்றிச் சிலாலிகிதங் களில் ஏற்பட்டிருக்கவில்லை. அவர்கள் ஆண்ட காலங் களின் நிர்ணயமும் தெளிவாக ஏற்பட்டிருக்கக் காணோம். இது முதல் நெடுங்காலம் வரைக்கும் சோழமன்னர்களது சரித்திரம் தெளிவாக ஏற்பட்டிருக்கவில்லை. தெளிவாக ஏற்படுவதெல்லாம் கூடி அவர்கள் படிப்படியாக வடக் கிலிருந்து மத்திய இந்தியாவிற்கும், பிறகு தென் இந்தியா விற்கும் படையெடுத்து வந்திருந்தவர்களுக்கும் கீழ்ப்பட் டிருந்த காலம் தொடங்கியே. கி. பி. இரண்டாவது நூற் ருண்டில் பல்லவர்கள் வடமேற்கிலிருந்து மத்திய இந்தியா விற்கு வந்தார்கள். அடுத்த நூற்ருண்டில் பாதிகழிவதற்கு முன்னரே அவர்கள் ஆந்திரர்களை ஜெயித்து அவர் களுக்கும் இன்னும் இதர பரம்பரை மன்னர்களுக்கும் சொந்தமாக விருந்த நாடுகளில் இங்கும் அங்குமாகப் பற் பல விடங்களில் தங்களது ராஜ்ஜியங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்கள் உடனே காஞ்சீபுரத்திற்குப் போனர்கள். இந்தப் பல்லவ பரம்பரையார்களுக்குத் தெற்கிலிருந்த புராதன இதர ராஜ்ஜியங்களுடன் ஏற்பட்டி

ருந்த சம்பந்தா சம்பந்தம் தெளிவாக ஏற்பட்டிருக்க வில்லை. ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் முதலாவது மஹேந்திரவர்மன் ஆண்ட காலத்திற்குப் பிறகு தான் அத்தகைய சம்பந்தம் முதல்முதல் தெளிவாக ஏற்பட்டது. அதற்குள்ளேயே அவர்கள் சோழர்களை ஜெயித்திருக்க வேண்டும். ஏனெனில் அவ்வரசனது லிகிதங்கள் திருச்சிராப்பள்ளி மலையிலுள்ள ஒரு குகையில் ஏற்பட்டிருக்கின்றன. தவிரவும் அவ்வரசனது தகப்பன் சிம்ஹவிஷ்ணுவும், அவனது மகன் முதலாவது நரசிம்ஹ வர்மனும் தாங்கள் சோழர்களை ஜெயித்ததாகக கூறியுள்ளர். சோழர்கள் எவ்வளவு ஒடுக்கப்பட்டார்களென்ற விஷயம் தெளிவாக ஏற்பட்டிருக்கவில்லை. திருச்சிராப்பள்ளி லிகிதங்கள் சோழர்களது பராக்கிரமத்தைப் பற்றிக் கூறியிருக்கக் காண்கிறோம். "பெரிய புராண"த்தில் கூறப்பட்டுள்ள சோழ அரசகுமாரி ஒருத்தி பாண்டிய அரசன் ஒருவனை மணந்து கொண்ட சம்பவம் நிகழ்ந்ததும் இக்காலத்திலே தான். அப்பாண்டிய அரசன் பக்த சிரேஷ்டராகிய திருஞான சம்பந்தரது உதவியால் சமணமதத்தை ஒழித்துச் சைவ மதத்தைத் தழுவிய காலமும் இதுவே. சீன தேசத்து யாத்திரிகர் ஹியூன் ஸியாங் தாம் நேரில் பார்க்காவிடினும் கி. பி. 640-வது வருஷத்தில் சோழ நாட்டைப் பற்றிக் கேட்டிருக்கிறார். இன்னொரு விஷயமும் கவனிக்கத்தக்கது. தொடர்ந்து மூன்று பல்லவ அரசர்கள் சோழ நாட்டை ஜெயித்ததாகக் கூறப்பட்டுளது. ஆதலின் சோழ மன்னர்கள் எளிதில் தங்களை அவர்கள் ஜெயித்துவிட இடம்

கொடுக்கவில்லை யென்பதாவது ஏற்படுகிறது. சோழ, பாண்டிய அரசர்கள் பேருக்குப் பல்லவர்களுக்குக் கீழ்ப்பட்ட அரசர்களாக விருந்தபோதிலும் அம்மரபினர்களால் யாதொரு தொல்லையும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. தஞ்சாவூர் ஜில்லாவில் எங்குமே வாஸ்தவமான பல்லவர்களது லிகிதங்கள் ஏராளமாய் ஏற்பட்டிருக்கவில்லை. தவிரவும் அவ்வமிசத் தரசர்கள் இந்தச் சமயத்தில் ஏற்பட்டுப் பலப்பட்டிருந்த பாதாமி சாலுக்கிய பரம்பரையாருடன் போராடிக் கஷ்டப் படவும் வேண்டியிருந்தது. இச் சாலுக்கிய பரம்பரையார் அனேக வருஷ காலம் சோழநாட்டார்களது சத்துருக்களாக ஏற்பட்டிருக்கவும் நேர்ந்தது.

கி. பி. ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் மேற் கூறியுள்ள சாலுக்கியர்கள் பம்பாய்ராஜதானியில் பாதாமி என்ற இடத்தைத் தலைமை நகரா‌க்கொண்டிருந்த மத்திய மேற்கு இந்தியாவில் ஸ்தாபிதமான ஒரு பெரிய ராஜ்ஜியத்திற்குத் தலைவர்களாக ஏற்பட்டுக் கிளம்பினார்கள். இரண்டாவது புலிகேசி என்ற அவர்களது அரசன் கீழ் அவர்கள் தங்கள் ராஜ்ஜியத்தைக் கிழக்கு சமுத்திரம் வரை கோதாவரி ஜில்லாவிற்குள்ளும் பரவச்செய்து பல்லவர்களைக் காஞ்சீபுரத்திற்குத் திரும்பிப் போய்விடும்படி துரத்தி விட்டார்கள். தாங்கள் பல்லவர்களையும் சோழர்களையும் ஜெயித்து விட்டதுமன்றிக் காவேரி ஆற்றையும் கடந்துசேர பாண்டிய ராச்சியங்களையும் படையெடுத்ததாக அவர்கள் தங்களது செய்கைகளைப்

புகழ்ந்தும் கூறியிருக்கிறார்கள். அவர்கள் சோழர் களை ஜெயித்த தென்றது நீடித்த ஜெயமாக ஏற்பட்டிருக்கக் காரணமில்லை. ஏனெனில் இக்காலத்தில் சோழ நாட்டில் ஸ்திரமான சாளுக்கிய ராஜ்ஜியம் ஏற்பட்டிருந்ததாகக் காட்டக்கூடிய யாதொன்றுமே இல்லை. இந்தச் சாளுக் கியர்கள் சேர சோழ பாண்டியர் களைப் பல்லவர் களுக்கு விரோதமாக ஒருங்கு கூடும்படி செய்ததாகக் கூறப்பட்டிருத்தல் உண்மையாக ஒரு கால் இருக்க லாம். பிறகு சீக்கிரத்திலேயே சாளுக்கியர்களது பலம் க்ஷீணிக்கத் தலைப்பட்டது. அவர்களுக்குள்ளேயே சச்சரவு ஏற்பட்டு அவர்களது ராஜ்ஜியம் இரண்டாகப் பிரிந்தது. அவைகள் பாதாமியைத் தலைமை நகரமாகக் கொண்ட மேற்குச் சாளுக்கிய ராச்சியமும், எல்லூருக் கருகிலுள்ள வேங்கியை ராஜதானியாகக் கொண் கிழக்குச் சாளுக்கிய ராச்சியமுமேயாம்.

"மன்னைக்குடி" என்னுமிடத்தில் பல்லவர்கள் அவர் களது அரசன் நந்திவர்மன் பல்லவமல்லன் என்றவனது சேனைத்தலைவன் கீழ்ப்பாண்டியர்களைத் தோற்கடித்த விஷ யம் பல்லவர்களது சிலா லிகிதங்களிலிருந்து ஏற்படுகிறது. மேற்கூறியுள்ள நந்திவர்ம பல்லவ மல்லனே மேற்குச் சாளுக்கிய அரசன் இரண்டாவது விக்கிரமாதித்தனால் பிறகு முற்றிலும் தோற்கடிக்கப்பட்டான். பாண்டியர் களும் பல்லவர்களும் சண்டையிட்டுக் கொண்டிருக்கை யில் சோழமன்னர்கள் என்ன செய்தார்கள் என்றதும் அவர்களுக்கும் பல்லவர்களுக்கும் யாது சம்பந்தம் ஏற்

பட்டிருந்த தென்றதும் தெளிவாக ஏற்பட்டிருக்கவில்லை. நமக்குத் தெரிந்துள்ள தெல்லாம் எட்டாவது நூற்றாண்டின் மத்திக்கு முன்பே மேற்கூறிய பாண்டிய பல்லவ யுத்தத்திற்குப் பிறகு பல்லவ ராச்சியம் க்ஷீணதசை அடைந்தது என்றதே. சில வருஷங்களுக்குப் பிறகு பாதாமி மேற்குச் சாளுக்கியர்களும் தங்களது சௌகரியத்தை இழக்க அவர்களது நாடு கன்னட தேசத்திலிருந்து வந்த ராஷ்டிரகூடர்களால் பிடித்துக் கொள்ளப்பட்டது.

பிந்தி வந்த கெங்க பல்லவர்கள் என்ற இன்னொரு பல்லவ வமிசத்தினர்கள் தமிழ் நாட்டில் பழைய பல்லவர்களது நிலைமையைப் பெற்றிருந்த விஷயம் ஏற்பட்டுள்ளது. ஆயினும் சோழ வமிசத்தின் கடைசி அரசன் விஜய நிருபதுங்க விக்கிரமவர்மன் காலம் வரை சோழ நாட்டில் அவர்களது அதிகாரம் பரவும்படி செய்ய வில்லை. இதற்கிடையில் சோழர்கள் வடக்கிலிருந்து கஷ்டம் அடையாவிடினும் அவர்களது நாடு பாண்டியர்களால் கொள்ளையிடப் பட்டது. அவர்கள் கெங்க பல்லவர்களை அண்டியிருந்த காலமும் சில வருஷங்களே. ஒன்பதாவது நூற்றாண்டின் இறுதியில் விஜயாலயன் என்ற அரசன் கீழ் அவர்களது ஸ்தலம் உத்தாரண மாயிற்றும். இந்த விஜயாலயன் ஒரு வமிசத்தை ஸ்தாபிக்க அதுவும் சோழ அதிகாரத்தை வடக்கிலும் மேற்கிலும் பரவச் செய்து அவர்களது குடிகளைச் சௌரியமும் பெருமையும் வாய்ந்திருந்தவர்களாகச் செய்தனன். மேற்கூறியுள்ள

விஜயாலயனையும் அவனுக்குப் பின்வந்த முதலாவது ஆதித்தனையும் பற்றி நமக்கதிகமாக ஒன்றுமே தெரியாது. முதலாவது ஆதித்தன் கொங்கு தேசத்தை ஜெயித்த தாகக் கூறப்பட்டிருக்கிறது. அதே அரசன் புராதன பல்லவ நாடாகிய தொண்டை மண்டலத்தைப் பிடித்துக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. அவனுக்குப் பின்வந்த முதலாவது பராந்தகன் கீழ்ச் சோழர்கள் அடைந்த ராச்சியம், ராஜ ராஜ சோழன், குலோத்துங்க சோழன் இவர்கள் காலத்திய பெரிய ராச்சியங்கள் இனி ஏற்படப்போகிற தென்பதைக் காட்டுவது போலிருந்தது. தவிரவும் இவன் வட ஆற்காடு ஜில்லாவில் திருவல்லம் என்ற இடத்தை ராஜதானியாகக் கொண்டு வட ஆற்காடு, சேலம் ஜில்லாக் களையும் மைசூர் முதலியவைகளையும் கொஞ்ச பாகங்களில் ஆண்டுவந்த பாணர்களை ஜெயித்திருந்ததுமன்றி, மைசூர் கங்கர்களையும், பாண்டியர்களையும் லங்கை அரசனையும் கூட ஜெயித்திருந்தனனென்று கூறப்பட்டுள்ளது. லங்கை அரசனை வென்றிருந்த காரணம்பற்றி அவன் சண்டையில் ராமன் என்ற பட்டமும் பெற்றனனும். மேற்படி சம்பவத்தை விவரிக்கையில் அவன் லங்காதிபதி அனுப்பிய ஒரு பெருத்த சைனியத்தைத் தான் ஒரு நொடியில் நாசம் செய்து விட்டதாகக் கூறியிருக்கிறான். இவன் தனது பராக்கிரமத்தினால் வென்ற நாடுகளிலிருந்து சுத்தமான தங்கத்தைக் கொண்டுவந்தான். சிதம்பரத்திலுள்ள நடராஜர் கோவிலுக்குத் தங்க முலா பூசின ஓடுகள் போட்டு வைத்தனன். தவிர இவன், "ஹேமகர்ப்பதானம்", "துலாபாரதானம்

முதலிய பெரிய தானங்களைச் செய்திருந்த தாகவும் கூறப்பட்டுளது. இவன் காஞ்சீபுரத்தையும், தஞ்சாவூரை யும் தனது தலைமைநகரங்களாகக் கொண்டிருந்தனனும். அவனது மஹிஷி கேரள தேசத்திய ராஜகுமாரி. இவன் இறந்ததும் சோழ அதிகாரமும் நசிக்கும்படி நேரிட்டது. அவ்வமிசம் அடுத்த ஐம்பது வருஷகாலம் அவன் முன் னோர்கள் இருப்பிடத்தையும் தொண்டை மண்டலத்தையும் விட்டுப் பெயரவேயில்லை. அவனது மூத்தகுமாரனும் அவ னுக்குப் பின் பட்டத்திற்கு வந்தவனுமான ராஜாதித்த னென்றவன் ராஷ்டிர கூட அரசனுகிய மேற்குச் சாளுக்கிய நாட்டை ஆண்டுவந்த மூன்ருவது கிருஷ்ணன் என்றவனு டன் சண்டையிட்டு கி. பி. 949-வது வருஷத்தில் ஆற் கோணத்திற் கருகிலுள்ள தக்கோலம் என்ற இடத்தில் கொல்லுண்டான். ஆனல் ஜெயித்திருந்தவன் தொண்டை மண்டலத்தைத் தவிர வேறு எந்த பாகத்தையும் ஜெயித் திருந்ததாக ஏற்படவில்லை. எனெனில் அவனது சிலா லிகிதங்கள் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களில் எங்குமே காணப்படவில்லை. ராஷ்டிர கூடர்கள் அவர்கள் ஜெயித்த தொண்டைமண்டலத்தை நீடித்து அடைந்திருக்க வில்லை. அது அடுத்த சில வருஷங்களுக் கெல்லாம் இரண் டாவது ஆதித்தன் வச மாயிற்று. ஆயினும் சோழ மன்னர்கள் அடைந்த பொழுது ஜெயித்தடைந்திருந்த நாடுகளி லெங்குமே குழப்பத்தை உண்டாக்கி யிருந்த தாம். முதலாவது ராஜ ராஜனது ஆட்சியில் இழந்த அதிகாரத்தைத் திரும்பவும் அடைந்தனர். இந்த அரசன் இரண்டாம் பராந்தகனது கடைசிக் குமாரன்.

அவனது முதல்பட்டம் ராஜகேஸரி வர்மன். அவனுக்கு ராஜ ராஜனென்ற பட்டம் சிதம்பரம் கோவில் அதிகாரிகள் அளித்ததாக ஏற்படுகிறது. அவனது நல்ல அதிர்ஷ்டம் நடுவில் சிறிது காலம் நீங்கலாக ஒரு நூற்றாண்டு குறைவு படாமலிருக்க ஆரம்பமாக ஏற்பட்டிருந்தது. அவனது ஆட்சியும் அதிகாரமும் மேற்கில் கொல்லம், குடகு முதலிய இடங்கள் வரைக்கும், லங்கை, கன்னியா குமரி முதலிய இடங்களிலிருந்து ஒரிசா வரைக்கும் பரவி யிருந்தது. அவனுக்குப் பின்வந்தவர்கள் சோழ அதி காரத்தை பர்மா, மலேயாத் தீவுகள் முதலான விடங்களி லும் பரவும்படி செய்தார்கள். அவனது முதல் வேலை கி. பி. 994-வது வருஷ சுமாரில் படையெடுத்துச் சென்று சேர நாட்டிலிருந்த ஒரு துறைமுகப்பட்டணத்தை நாச மாக்கியதே. தவிரவும் அவன் தான் சேரபாண்டிய அரசர்களை மலையாள தேசத்தில் பன்முறை தோற்கடித்து அதையும் பிடித்துக் கொண்டதாகக் கூறியிருக்கிறான்.

இவனுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்தவன் முதலா வது ராஜேந்திர சோழன். இவனது அதிகாரம் கஞ்சம் ஜில்லாவில் மஹேந்திரகிரி வரை பரவியிருந்தது. அவனுக்குப் பிறகு அவனது மகனோ அல்லது சகோ தரன் புதல்வனோ பட்டத்திற்கு வந்தான். ராஜேந்திர சோழன் காலத்திலேயே உபராஜாவாக இருந்துவந்த அவனது பெயர் முதலாவது ராஜாதி ராஜதேவன். அவனும் ஆகவமல்லன் என்ற மேற்குச் சாளுக்கிய அரசனுடன் போர்புரிந்து பெல்லாரி ஜில்லாவில் கம்பிளி

என்னு மிடத்தில் ஏற்பட்டிருந்த சாளுக்கியர்களது அரண்மனையைத் தீயிட்டுக் கொளுத்தி, பம்பாய் ராஜதானியில் கோல்ஹாபூர் என்னுமிடம் வரை கூடச் சண்டையிட்டுச் சென்றிருந்தனன். இவன் அசுவமேத யாகம் செய்து முடித்த அரசன் என்பதிலிருந்து இவனது சாமர்த்தியமும் பராக்கிரமமும் விளங்கும். இவனும் 1053-வது வருஷத்தில் மைசூரில் கொப்பம் என்ற இடத்தில் சோழர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் நேர்ந்த யுத்தத்தில் கொல்லுண்டான். பிறகு பட்டத்திற்கு வந்தவன் வீரராஜேந்திர தேவன். இவனும் சேரபாண்டியர்களை ஜெயித்துக் கிழக்குச் சாளுக்கியர்களது வேங்கி தேசத்தைத் திரும்பவும் பிடித்துக்கொண்டது மன்னியில், மேற்குச் சாளுக்கியர்களையும் ஒடுக்கினதாகக் கூறப்பட்டுளது. மேற்குச் சாளுக்கிய அரசன் ஆகவமல்லன், தனது தோல்வியினால் வெட்கமடைந்து அவமானத்தைவிட மரணமே சிறந்த தெனக் கருதி முன்னர்த் தானும் தனது குமாரர்களும் தோல்வியுற்று ஓடின கூடல் என்னு மிடத்திலேயே மறுபடியும் சண்டைக்குவரும்படி வீரராஜேந்திர தேவனை அழைத்தனன். அவனும் மிக்க சந்தோஷத்துடன் புறப்பட்டுச் சென்று ஆகவமல்லவனை எதிர்பார்க்க அவன் வரவில்லை. அப்பயங்காளி பயந்து ஓடிவிட் டிருந்தான்.

வீரராஜேந்திர சோழன் இறந்ததும் சோழ நாட்டில் ஒழுங்கு தவறிப் போயிற்று. முந்திய இரண்டொரு வருஷங்களாகவே அவனது மகன் அதிராஜேந்திரன் வ ராஜாவாக இருந்து வந்திருந்தான். அவன் பட்டத்

திற்கு வந்ததும் தொல்லை ஏற்பட்டது. மேற்குச் சாளுக்கிய அரசனும் வீரராஜேந்திர தேவனது மருமகனுமான ஆறாவது விக்கிர மாதித்தன் என்றவன் தனது மாமனார் இறந்து சோழ ராஜ்ஜியம் அரசனின்றி யிருந்ததென்று கேட்டதும் புறப்பட்டு வந்து அதிராஜேந்திரனை அரசனாக்கினான். அப்படிச் செய்து திரும்பிச் சென்றதும் ஏற்பட்ட ஒரு குழப்பத்தில் அந்த அதிராஜேந்திரன் கொலை செய்யப்பட்டுக் குலோத்துங்கன் என்றவன் சிங்காதன மேறினான் என்ற சங்கதியைக் கேள்விப்பட்டான். இந்தக் குலோத்துங்கன் ராஜேந்திர சோழனது பேரனும் ஸ்வீகாரப் புதல்வனு மாவான். பிறகு ஆறாவது விக்கிர மாதித்தனுக்கும் குலோத்துங்கனுக்கும் பலத்த சண்டை நேர்ந்தது. குலோத்துங்கன் விக்கிரமாதித்தனைக் கோலாரிலிருந்து துங்கபத்திரைக்குத் துரத்தி விட்டனன். கிழக்குச் சாளுக்கிய அரசனாகிய ராஜராஜனுக்கும் சோழ மன்னனாகிய ராஜேந்திர சோழனது மகளாகிய அம்மங்கா தேவிக்கும் புதல்வனாகப் பிறந்த இந்தக் குலோத்துங்கன் அவனது தாய்ப்பாட்டனால் அருமையாக நடத்தப்பட்டுப் பிறகு அவரது ஸ்வீகாரப் புதல்வனாகவும் ஏற்பட்டான். அவனது தகப்பனார் இறந்த பிறகு அவர் ஆண்டு வந்த ராச்சியம் குலோத்துங்கன் வசப்படாமல் அவனது தகப்பனாரின் சகோதரர்களில் ஒருவனது வசப்பட்டிருந்தது. குலோத்துங்கனுக்குச் சோழராச்சியத்துடன் வேங் தேசமும் கிடைத்திருந் திருக்கவேண்டுமெனத் தெரிகிறது. ஏனெனில் தெற்கில் அவனது அதிகாரம் நன்கு பலப்பட்டிருந்த பொழுதும் அவன் அவனது

சிற்றப்பனை வடக்கில் ராஜப் பிரதிநிதியாக விருக்கும்படி விட்டிருந்தான். அவன் தனது ராச்சியத்தைப் பெரிதாக்க யாதொன்றுமே செய்யவில்லை. அவன் காலத்தில் தான் சோழராச்சியம் இலங்கையை இழந்திருக்க வேண்டும். ஆயினும் இரண்டொரு திசைகளில் அவனுக்கு முந்தியிருந்தவர்கள் இழந்திருந்த சிலஇடங்களை அவன் திரும்பவும் பிடித்துக்கொண்டான். இவனது பிரதான நகரம் கங்கைகொண்டசோழபுரம். அப்படிக்கிருந்தும் காஞ்சீபுரமும் ஒரு முக்கியமான ஊராகவும் அவன் எப்போதாயினும் பிரியப்பட்டால் சில காலம் இருக்க ஏற்படுத்திக் கொண்டிருந்த இடமாகவும் இருந்ததென்பது கலிங்கத்துப் பரணியில் வெளியாகிறது. இவனது ஒரு சீர்திருத்தம் மறக்கத் தக்கதன்று. வியாபாரத்திற்குப் பண்டைக் காலத்தில் இடையூறாக ஏற்பட்டிருந்த உள்நாட்டுச் சுங்க வரிவசூலை நிறுத்திவிட்டான். அனதுபற்றியே இவனுக்குச் "சுங்கந் தவிர்த்த குலோத்துங்க" னெனப் பெயர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் சோழ அதிகாரம் கொஞ்சம் கொஞ்சமாய் க்ஷீணிக்கத் தலைப்பட்டது. ஆயினும் இரண்டொரு சோழமன்னர்கள் பராக்கிரமம் பொருந்தியிராமற் போகவில்லை. உதாரணமாக விக்கிரம சோழன் அவனது தகப்பன் குலோத்துங்கனது பெருமை குன்ற விடவில்லை. ஆனால் அவனுக்குப் பின்வந்த இரண்டாவது குலோத்துங்கன், இரண்டாவது ராஜராஜன் முதலானவர்கள் காலத்தில் சோழஅதிகாரம் அதிசீக்கிரமாகவே க்ஷீணிக்கத் தலைப்பட்டது. இலங்கை அரசனும்

சோழர்களது எதிரிபக்ஷம் சேர்ந்து கொண்டு வடக்கில் படையெடுத்து வந்து பட்டுக்கோட்டைத் தாலூக்காவில் சில கிராமங்களை எரித்து விட்டனனும்.

வாஸ்தவமாகவே பராக்கிரம சாலியாக ஏற்பட்டிருந்த கடைசிச் சோழஅரசன் மூன்ருவது குலோத்துங்கன் சிங்களர்களைத் தோற்கடித்து, அவர்களது மூக்குகளை அறுத்துத் துரத்திவிட்டு மதுரையைப் பிடித்துக் கொண்டு பாண்டிய அரசாட்சியைத் தனது மனிதன் ஒருவனிடம் ஒப்பிவித்தனனும். மேற்கூறிய அவனது தீரச்செயல்களால் "மதுரையையும் லங்கையையும் ஜெயித்தவன்" என்ற பட்டம் பெற்றனன். ஆயினும் மேற்கூறிய ஜெயங்கள் சோழ ராச்சியம் க்ஷீணித்ததை அதிககாலம் தடுக்க முடியவில்லை.

மூன்ருவது ராஜராஜன் காலத்தில்தான் சோழ அதிகாரம் நசிக்க பலமான சம்பவங்கள் நேர்ந்தன. பாண்டிய நாட்டின் அரசனுகிய முதலாவது மாரவர்மன் சுந்தர பாண்டியன் தான் தஞ்சாவூரையும், உறையூரையும் நெருப்பிட்டுக்கொளுத்தி சோழராச்சியத்தைப்பிடித்துக்கொண்டு அதைச் சோழமன்னனுக்குக் கொடையாகத் திரும்பவும் அளித்ததாகக் கூறியிருக்கிருன். தவிரவும் பல்லவ மரபிலுதித்த ஒரு அரசகுமாரன் 1200-31-வது வருஷத்தில் இந்தச் சோழ அரசனைச் சிறை செய்துகொண்டுபோன விஷயம் ஏற்பட்டுளது. ஆனல் அவ்வரசன் பின்னர் ப[illegible] தாகக் கிளம்பின ஹாய்ஸால பல்லாலர்களால் விடுதலை செய்யப்பட்டு அவர்களிடமிருந்து தான் இழந்த ராச்சிய

தையும் திரும்பிப் பெற்றனம். மேற்கூறிய ஹாய்ஸால பல்லாலர்கள் மேற்குச் சாலுக்கிய நாடுகளை ஜெயித்துக் கொண்டு தெற்கில் நேர்ந்த விஷயங்களிலும் தலையிட்டுக் கொள்ளத் தொடங்கினார்கள். அவர்கள் சோழமன்னர் களைப் பாண்டியர்களது கையிலிருந்து பாதுகாத்து ஸ்ரீரங்கத்திற்கருகில் கண்ணனூரில் கோட்டை ஏற்படுத்திக் கொண்டு தங்கினார்கள். ஹாய்ஸாலர்களை எதிர்த்த கடைசிச் சோழமன்னன் மூன்றாவது ராஜேந்திரசோழன். ஆயினும் ஹாய்ஸாலர்கள் நிரந்தரமாய்ப் பலம் குன்றிப் போகவில்லை. இதற்குமேல் பாண்டிய அதிகாரம் தலையெடுத்தது. முதலாவது ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் நெல்லூர் வரை சென்று பல ஜெய மடைந்து ஸ்ரீரங்கம் கோயிலைத் தங்க முலா மிட்டனன். இந்தச் சமயத்தில் டெல்லி சக்கிரவர்த்தியின் சேனாதிபதி மாலிக்காபர் தென் இந்தியாவைத் திடீரென்று படையெடுத்து வந்தான். தென் இந்தியாவை முதல் முதல் படையெடுத்த முகம்மதியனாகிய இவனது படையெழுச்சிதான் ஹாய்ஸால அதிகாரத்தை நசிக்கச்செய்து, விஜயநகர ராச்சியம் ஏற்படக் காரணமாயிற்று. ஹாய்ஸால பரம்பரையின் ஒரு பிரிவினர் துங்கபத்திரா நதிக்கரையில் விஜயநகர ராச்சியத்தை ஸ்தாபித்து இரண்டு நூற்றாண்டுகள் வரைக்கும் முகம்மதியர்களை முன்வராமல் தடை செய்து கொண்டுவந்திருந்தனர். இந்த விஜயநகர அரசர்களின் கீழ் இருந்துவந்த நாயக்க அரசர்கள் தஞ்சாவூரில் சுயேச்சை பெற்றார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் சேவப்ப நாய்க்கர், அச்சுத நாய்க்கர், ரெகுநாத நாய்க்கர்

1565-வது வருஷத்தில் நடந்த தளிக்கோட்டைச் சண்டையில் விஜயநகரம் நசித்துப்போக நேர்ந்தது. அந்த வமிசத்திய அரசர்கள் பெல்லாரி, அனந்தபுரம் ஜில்லாக்களின் பெரும்பாகத்தை பாமினி சுல்தான்களுக்கு விட்டு விட்டு விஜய நகரத்திலிருந்து சென்று முதலில் அனந்தபுரம் ஜில்லாவிலுள்ள பெனுகொண்டாவையும் பின்னர் முறையே சந்திரகிரியிலும் வடஆற்காடு ஜில்லாவிலுள்ள வேலூரிலும் தங்களது பிரதான நகரங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். இம்மரபின் கடைசி அரசன் வெங்கடபதி கும்பகோணத்தில் 1590-ல் இருந்தனனென்று தெரிகிறது. அவனது ஆட்சியின் இறுதியில் தஞ்சாவூர் அரசன் மதுரை அரசனுடன் விஜயநகர சிம்ஹாஸனத்திற்காகச்சண்டைபோட்டுக் கொண்டிருந்தான். திருமலைநாய்க்கன் காலத்தில் அவனது ஆட்சியின் ஆரம்பத்தில் மதுரைதான் முதல் முதல் சுயேச்சையை அடைந்தது. பிறகு செஞ்சி நாயக்கர்களும், தஞ்சாவூர் அரசனும் சுயேச்சை பெற்றிருக்க வேண்டும். தஞ்சாவூர் அரசன் விஜயநகர அரசனாகிய ரங்கன் என்றவனுக்குக் கப்பம் கட்டுவதை நிறுத்திவிட்டான். ஆயினும் அவனும் செஞ்சி நாயக்கர்களும் பிரதி வருஷமும் தங்களது முந்திய எஜமானனுக்கு உபசாரவார்த்தைகள் அனுப்புவதை மாத்திரம் நிறுத்தவில்லை. முதலில் ரங்கன் செஞ்சியை எதிர்த்துச் சென்றான். தஞ்சாவூரும் அவன் கீழ்ப்பட்டது. ஆனால் மதுரைத் திருமலை கீழ்ப்படியவில்லை. அவன் கோல்கொண்டா முகம்மதிய அரசனது உதவியை நாடினான். அவன் வந்ததும் ரங்கன் தெற்கிலுள்ள தனது கீழ்ப்பட்ட அரசர்

களது உதவியை நாடவேண்டியதாயிற்று. ஆனால் அதைப் பெறாமல் மைசூர் அரசனை உதவிக்காக அணுக நேர்ந்தது. இது விஜயநகர அதிகாரத்தை முடியச்செய்தது.

1644-வது வருஷத்தில் கோல்கொண்டா சுல்தான் தனது நன்மையை நாடியே செஞ்சியை எதிர்த்தான். திருமலை தான்செய்த தவறை உணர்ந்து பீஜப்பூர் முகம்மதிய சுல்தானை உதவி கேட்டான். அவன் அனுப்பிய சேனை கோல்கொண்டா சேனையுடன் சேர்ந்து கொண்டு செஞ்சியையே முற்றுகை செய்தது. பிறகு கோல்கொண்டா அரசன் திரும்பிப் போகும்படி நேரிட பீஜப்பூர் சுல்தான் செஞ்சியைத் தானே பிடித்துக் கொண்டது மன்னியில் தஞ்சாவூர் மதுரை அரசர்களையும் தனக்குக் கீழ்படிந்து கப்பம் கட்டும்படி செய்தான்.

மேற்கூறிய நாயக்கர்களது ஆட்சிக் காலத்திலேயே தஞ்சாவூர் ஜில்லாவில் ஐரோப்பியர்கள் தங்குமிடம் தேடிக் கொண்டிருந்தார்கள். நாகப்பட்டணத்தில் போர்ச்சுகேசியர்கள் 1612-லும் தரங்கம்பாடியில் டச்சுக்காரர்கள் 1620-லும் இடம் பெற்றார்கள். பீஜப்பூர் சுல்தானிடம் வேலைக்கமர்ந்திருந்த மஹாராஷ்டிர வீரன் சிவாஜி படிப்படியாய் பலம்பெற்றுத் துலுக்கர்களையும் மற்ற ஐரோப்பிய ஜாதியார்களையும் ஒடுக்கிப் பலம் வாய்ந்திருந்த இங்கிலீஷ் காரர்களுடன் போராட நேர்ந்தது. அதில் ஜெயம் பெற்ற இங்கிலீஷ்காரர்கள் நாளடைவில் மற்ற விடங்களைப் போல் இந்த ஜில்லாவையும் 1799-ல் கைக்கொண்டார்கள்.

---

## அத்தியாயம் 2

### விசேஷ இடங்கள்

தஞ்சாவூர் (Tanjore) :—இவ்வூர் இந்த ஜில்லாவின் தலைமை ஊர் என்பதுடன் இது ஒரு முனிசிபாலிடியுமாகும். இங்கு ஜில்லா அதிகாரிகள் இருக்கிறார்கள். இந்த ஊர் ரயில்ஸ்டேஷன் ஒரு நேர்த்தியான கட்டிடம். தென் இந்தியா இருப்புப்பாதையிலுள்ள இந்த ஜங்ஷனில் நாகப்பட்டணம் கிளைப்பாதை வந்து சேர்கிறது.

தஞ்சாவூர் ஒரு பெரிய பட்டணம். அதன் ஜனத்தொகை சுமார் அறுபதாயிரம். நூற்றில் 85 பெயர்கள் ஹிந்துக்கள். தவிரவும் முகம்மதியர்களும், கிறிஸ்தவர்களும் கொஞ்சம் ஜெயின மதஸ்தர்களும் இங்கேயிருக்கிறார்கள். ஹிந்துக்களுக்குள் பிராம்மணர்களும், வேளாளர்களும், அதிகம். சரித்திர சம்பந்தமாயும், பிராசீன விஷயமாயும் ஆராச்சி செய்ய இடம் கொடுப்பதாக இருக்கும் இவ்விடம் கைத்தொழில்களுக்கும் பேர்போனது. இது மிதமான சீதோஷ்ண நிலை வாய்ந்துள்ள இடம். இது வடவாற்றிற்குத் தெற்கில் இருக்கிறது. அங்கங்கு நெருக்கமாக மரங்கள் அடர்ந்துள்ள மேடுபள்ள மற்ற நாட்டின் மத்தியில் இது அமைந்திருக்கிறது.

இவ்வூரில் பெரிய கோட்டை, சின்னக் கோட்டை என்ற இரு பாகங்களுண்டு, தென் கிழக்கில் மானம்பூச்சாவடி என்ற உபநகரமும் வடக்கில் கரந்திட்டான்குடி

என்ற உப நகரமும் அடங்கியுள்ளன. ஐரோப்பியர்களது விடுதிகள் இருப்பது மானம்பூச்சாவடி யென்ற உப நகரத்தில். பழைய நகரம் முற்றும் ஒரு சமயத்தில் பெரிய கோட்டையிலேயே இருந்திருக்க வேண்டும். இப்பொழுதும் அதன் பெரும்பாகம் அதற்குள்ளேயேதா னிருக்கிறது. சிறிய கோட்டை என்ற விடம்தான் இரண்டிலும் புராதனமானது. அது பெரிய கோட்டை என்ற இடத்திற்குத் தென்மேற்கில் இருக்கிறது. அது அம்மூலையில் மாத்திரம் தான் பெரிதுடன் சேர்ந்திருக்கிறது. அது நல்ல நிலைமையி லிருக்கிறது. அதன் பழைய சுவர்களும் அகழியும் இப்பொழுதுகூட நேர்த்தியானவைகளா யிருக்கின்றன. பெரிய கோட்டையின் சுவர்கள் பெரும்பாலும் இடிக்கப்பட்டு அகழியும் தூர்த்துவிடப்பட் டிருக்கினும் பெரும்பாகம் அப்படியே இருக்கக் காணலாம். கோட்டைக்குள்ளும், கோட்டைக்கு வெளியிலும் பெரிய உறுதி வாய்ந்த அனேக வீடுகள் ஏற்பட்டிருக்கின்றன. மாடவீதிகள் பெரிதாயும் நேர்த்தியாயும் அகலமாயு மிருக்கின்றன.

தஞ்சாவூருக்கும் சோழர்களுக்கும் அதிக சம்பந்த முண்டு. அவர்கள் இங்கு ஒரு பெரிய கோவிலைக் கட்டி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அது அவர்களது ஆச்சரியமான விவேகத்தின் அறிகுறியே ஆகும். ராஷ்டிர கூட அரசனாகிய மூன்றாவது கிருஷ்ணன் தான் தஞ்சாவூரைப் பிடித்து விட்டதாகப் பெருமை பேசியிருந்ததிலிருந்து அது அக்காலத்தில் சோழர்களது முக்கிய நகரங்களில் ஒன்றாக இருந்திருக்க வேண்டுமென்றது

ஏற்படுகிறது. இந்நகரிலுள்ள பெரிய கோவிலைக் கட்டி வைத்து பிரக்யாதி பெற்ற முதலாவது ராஜராஜனது ஆட்சி முடிவுபெற்ற காலம் வரை இது ராஜ வாஸ ஸ்தானமாகவே இருந்து வந்தது. அவனுக்குப் பிறகு வந்த முதலாவது ராஜேந்திர சோழன் தனது வாஸஸ்தலத்தைத் திரிச்சினப்பள்ளி ஜில்லாவிலுள்ள கங்கை-கொண்டசோழபுரத்திற்கு மாற்றிக் கொண்டான். பதினோராவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் அபேரபியா தேசத்திய யாத்திரிகர் ஆல்பிருனி (Alburune) என்றவர் தஞ்சாவூர் பாழாய்ப் போயிருக்கிறதெனக் கூறியுள்ளார். அரசன் முதலாவது ராஜேந்திரசோழன் அங்கிருந்து தனது வாஸஸ்தலத்தை மாற்றியிருந்ததையே அது குறிக்குமென நினைக்க இடம் தருகிறது. பதின்மூன்றாவது நூற்றாண்டில் பாண்டிய நாட்டரசன் தான் தஞ்சாவூரையும் உறையூரையும் நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டதாகப் பெருமை பேசியிருப்பதிலிருந்து சோழர்களது அதிகாரம் க்ஷீணிக்கப்போகும் காலத்திலும் இந்த நகரம் ஒரு முக்கிய நகரமாகவே இருந்ததென்று ஏற்படுகிறது. இங்குள்ள கோவிலுக்கு யாதொரு தீங்குமே ஏற்பட்டிருக்கவில்லை. நாயக்கமார்கள் இந்த ஜில்லாவை 1549-ல் அடைந்ததும் தஞ்சாவூரையே பிரதான நகரமாக ஏற்படுத்திக்கொண்டார்கள்.

இந்நகரின் கண்ணுள்ள இரு கோட்டைகளுள் சிறிய கோட்டையைச் சேவப்ப நாயக்கரும் பெரிய கோட்டையைச் இம்மரபின் கடைசியரசனான 1673-வது வருஷத்தில்

காலஞ்சென்ற விஜயராகவ நாயக்கரும் கட்டிவைத்ததாக ஏற்படுகிறது. பின்னர் வந்த மஹாராஷ்டிரர்களும் தஞ்சாவூரையே அவர்களது தலைமை நகரமாகச் செய்து கொண்டிருந்தார்கள். 1855-வது வருஷம் அக்டோபர் மாதம் 29-ம் தேதி சிவாஜி இறந்து ராஜவமிசம் நசித்ததும் இத் தஞ்சைமா நகரம் இங்கிலீஷ்காரர்களிடம் வந்தது.

இந்நகரிலுள்ள பெரிய பிரஹதீசுவரர் கோவில் (படம் 2) சிறிய கோட்டையின் தெற்குப் பாதையில் ஒரு பெரும் பாகத்தை அடக்கிக் கொண்டிருக்கிறது. இது முதலாவது ராஜராஜசோழ மஹாராஜர் காலத்தில் ஏற்பட்டது. இந்தக் கோவிலுக்குள் போகக் கிழக்குத் திசையில் கோபுரத்துடன் கூடிய ஒரு நேர்த்தியான கோபுரவாசல் இருக்கிறது. இவ்வழி ஒரு வெளிப் பிராகாரத்தின் வழியாக ஏற்பட்டிருக்கிறது. இக்கோவிலுக்குள் போக இது கட்டப்பட்டிருக்கும் பிராதானப் பிராகாரத்தில் அழகிய பின்னொரு வாசலும் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இந்தப் பிராகாரம் 500-அடி நீளமும் 250-அடி அகலமும் வாய்ந்து எல்லாப்பக்கங்களிலும் ஒரு மூடிமண்டபத்தினால் சூழப்பட்டிருக்கிறது. பிராதானக் கோவில் இப்பிராகாரத்தின் மேற்குக் கோடியி லிருக்கிறது. அதைச் சுற்றிலும் மண்டபங்களும், சிறிய கோவில்களும் இங்குமங்குமாக ஏற்பட்டிருக்கின்றன. அதன்மேல் சுமார் 200-அடி உயரமுள்ள ஒரு நேர்த்தியான விமானம் கட்டப்பட்டிருக்கிறது. அவ்விமானம் பற்பல விதமான ஸ்தம்பங்களாலும், பிரதிமைகளாலும் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது.




(படம் 2)—தஞ்சாவூர் பிரஹதீசுவரர் கோவில்.

கோபுரத்தைத் தாங்கும் அஸ்திவாரம் பக்கம் 96-அடி
ள சதுரமான இடம். அஸ்திவாரக் கட்டத்தின் மேல்
ர ஒரு பெரிய கருங்கல் போட்டு மூடப்பட்டிருக்
து. இக்கல்லின் நிறை 80-டன் என்றும் அது நான்கு
மல் தூரத்திலுள்ள சாரப்பள்ளம் என்னு மிடத்தி
ருந்து விமானத்தின் உச்சிக்குப் படிப்படியாக உயர்த்தி
ற்படுத்தப்பட்ட மார்க்கத்தின் வழியாக நகர்த்திக்
காண்டு வரப்பட்டதென்றும் ஜனங்கள் சொல்லுகிறார்
ள். இக்கோவிலின் விமானத்தின் அலங்காரத்தில் ஒரு
சேஷம். இதிலுள்ள பிரதிமைகள் வைஷ்ணப் பிரதிமை
ர், மற்றப் பாகங்களில் உள்ளவைகள் சிவ பரப்பிர
மைகள். இன்னொரு விசேஷம். இக்கோபுரத்தின் வட
க்கத்திலுள்ள பிரதிமைகளுள், ஒரு ஐரோப்பியனது
ரதிமையும் ஏற்பட்டுளது! இது பின்னர் ஐரோப்
யர்கள் இவ்வூரைக் கைப்பற்றுவார்களென்பதைக் குறிப்
ட்டதென்று ஜனங்கள் நினைக்கிறார்கள். பிரதிமையிலுள்ள
ரோப்பியன் டென்மார்க் (Denmark) தேசத்தியவனும்.
ந் நகரின் பெரிய கோட்டையில் கீழ் கொத்தளத்தில்
0-அடி நீளமும் மூன்றடி சுற்றளவுமுள்ள "ராஜகோபால"
னெனப் பெயருடைய இரும்பு பீரங்கி ஏற்றி வைக்கப்பட்
டருக்கிறது. சிறிய கோட்டையில் சிவகங்கை யென்ற
அழகிய குள மிருக்கிறது. இது பிராகாரம் சூழ்ந்த இடத்
தில் வடமேற்குப் பாகத்தி லிருக்கிறது. அதற்குச் சேர்ந்
தாற்போல் கிழக்கில் சிவகங்கைத் தோட்டமென்ற நந்த
வன மிருக்கிறது. இது ஜனங்களின் உபயோகத்திற்காக
1871-72-ல் முனிஸிபாலிடியாரால் நந்தவனமாக ஏற்படுத்

தப்பட்டு இப்பொழுது ஜன நெருக்கத்தினாலும், பே மான காற்றின்மையாலும் பிரயோசன மற்றதெ ஆதரிக்கப்படாமல் விடப்பட்டிருக்கிறது. இக்கோட்டை குள் வடகிழக்கு மூலையில் ஷ்வார்ஸ் சர்ச் (Schwar Church) என்ற ஒரு கிறிஸ்தவ மாதா கோவிலிருக்கிறது

இவ்வூரில் அரண்மனை பார்க்கவேண்டிய இடங்களி ஒன்று. அதில் நாயகர் மண்டபம், மஹாராஷ்டிர மண்ட பம் என்ற இரண்டு ஆஸ்தான மண்டபங்கள் முக்கி மானவை. நாயக்கர் மண்டபத்தில் தான் கடைசியாக இ வூரை ஆண்ட சரபோஜி மஹாராஜாவின் (1781-182 சிலை (படம் 3) இருந்து வருகிறது. தவிரவும் இந்த அரண் மனைக் கட்டிடத்தில் இரண்டு கோபுரங்கள் இருக்கின்றன அவைகளி லிருந்து பார்த்தால் இந்நகரமும் அதற் கரு லுள்ள பாகங்களும் நன்கு காணப்படும்.

சுதேசமன்னர்களின் கீழ் தஞ்சாவூர் சிற்ப சாஸ்திர முதலானவைகளுக்குப் பெயர் பெற்ற விட மென்ற தெரிந்துள்ள விஷயம். இப்பொழுது சித்திரவேலை செய் ஜீவிக்கும் குடும்பங்கள் பல இவ்வூரில் இருக்கின்றன.

வல்லம் (Vallam):—இது தஞ்சாவூருக்குத் தெ மேற்கில் ஏழு மைல் தூரத்தி லிருக்கிறது. இவ்விடம் ஒ சமயம் பலத்த கோட்டையுடன் கூடித் தஞ்சாவூருக்கு பாதுகாப்பிற் கேற்பட்டிருந்த முக்கிய இடங்களி ஒன்றாகவு மிருந்தது. இவ்விடம் 1560-வது வருஷ சுமாரி




(படம் 3)—சரபோஜி மஹாராஜாவின் உருவச்சிலை.

மதுரைநாயக்கர்களால் தஞ்சாவூர் நாயக்கர்களுக்குத் திரிச்சிராப்பள்ளிக்குப் பதிலாகக் கொடுக்கப்பட்டது அது 1660-வது வருஷத்தில் செஞ்சியிலிருந்து பீஜப்பூர் சைனியத்தினல் பிடித்துக் கொள்ளப்பட்டது. அச்சமயம் தஞ்சாவூர் நாயக்கர் தனது கஜானவை அங்கு வைத்திருந்தார். 1664-வது வருஷத்தில் மதுரை சொக்கநாதன் என்றவனல் அது பிடித்துக் கொள்ளப்பட்டுக் கொஞ்சகாலம் ராணுவம் வைக்கப்பட்டிருந்த விடமாக ஏற்பட்டிருந்ததாக கூறப்பட்டுளது. மூக்குக்கண்ணடி முதலியவற்றுக்கு உபயோகமான ஸ்படிகக் கற்கள் (Pebbles) இங்கே விசேஷம்.

இங்குள்ள கோட்டை முட்டை வடிவமானது. தற்சமயம் கோட்டை முழுமையும் அழிந்துவிட்டது. தென் வடலில் இதன் நீளம் சுமார் 780-கஜம். அகலம் சுமார் 520-கஜம். கோட்டைக்குள் "வச்சிர தீர்த்தம்" என்ற ஒரு குள மிருக்கிறது. அது ஆழம் நிர்ணயிக்கப் படாதது. ஹிந்துக்களால் புண்ணிய தீர்த்தமெனக் கருதப்பட்டு வருகிறது. மாசிமக தினத்தில் இதில் ஸ்நானம் விசேஷம். கௌதம மஹரிஷியின் பத்தினியான அகலிகையின் கற்பைக் கெடுத்த பாபம் நீங்கவேண்டி இந்திரனல் வெட்டப்பட்ட தீர்த்தம்.

திருவையாறு (Tiruvadi):—இது தஞ்சாவூருக்கு மேற்கில் ஆறுமைல் தூரத்திலுள்ளது. இவ்விடம் ஒரு புண்ணிய ஸ்தலமெனக் கருதப்படுவதால் பிராமணர்க

அதிகமாக இங்கு வசிக்கிறார்கள். ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பாகம் பிராமணர்களே.

இந்நகரின் சாதாரணமான பெயர் திருவையாறு.

எழுவா யிறுவா யிலாதன வெங்கள் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன்மாநர க்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்க ஐயாற னடித்தலமே.

வடமொழியில் இதைப் பஞ்சநத மெனக் கூறுவார்கள். இங்கிலீஷில் திருவாதி என்ற பெயர் எக்காரணம் பற்றி வந்திருக்கலா மென்பது தெரியவில்லை. சாதாரணமாய் ஜனங்கள் இவ்வூரைத் திருவையாறு என்றே அழைப்பது வழக்கம். புண்ணிய நதியாகிய காவேரியின ஐந்து கிளை நதிகள் இந்நகரின் ஐந்துமைல் தூரத்திற்குள் ஓடுவதிலிருந்து இவ்வூரின் பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

திருவையாறு காசிக்குமேல் வீசம் அதிகமான புண்ணிய ஸ்தலமெனக் கூறப்பட்டுளது. தனது தகப்பனாரது எலும்புகளைக் கங்கையில் போடுவதற்காகச் சென்றுகொண்டிருந்த அந்தணன் ஒருவன் ஓரிரவு இந்த ஊரில் தங்க நேர்ந்தது. தூங்கி எழுந்ததும் அவன் வைத்திருந்த லும்புகள் லிங்காகிருதியாக மாறியிருக்கக் க[illegible]ான். யினும் அவ்வேதியன்[illegible]

[illegible]

மானத்திற்குவந்து அப்பிராமணன் தனது தகப்பனது எலும்புகளை இவ்விடத்திலுள்ள நதியிலேயே போட்டுச் சென்றனனும். இப்பொழுது இறந்து போனவர்களது எலும்புகள் இதர ஜில்லாக்களிலிருந்தும் கூடக் கொண்டு வந்து இவ்விடத்திய நதியில் போடப்படுகின்றன. அனேகம் பிராமணர்கள் திருவையாறிலேயே இறந்து போக வேண்டுமென்ற எண்ணத்துடன் அவ்வூரில் வசிக்கப் போகிறார்கள். அவ்வூரில் இறத்தல் விசேஷம்என்பதைக்குறிக்கும் ஒரு கதையுமுளது. பஞ்சநதீசுவரரைப் பூசித்துக் கொண்டிருந்த ஒரு சிறுவனை யமன்கொன்று அவனது ஜீவனைக் கொண்டு போக முயலுகையில் ஈசன் யமனைக் கொன்று மறுபடியும் உயிர்ப்பித்து அவன் திருவையாறில் இறந்தவர்களையும், திருவையாறுக் கோவிலிலிருந்து கிளம்பும் சாம்பிராணிப் புகையைப் பார்க்கக்கூடிய தூரத்தில் இறந்தவர்களையும் பாதிப்பதில்லை யென்று வாக்களிக்கும்படி செய்தனர். இங்குள்ள கோவிலின் தெற்கு வாசலின் முன் ஒரு பெரிய குழியில் சாம்பிராணி ஸதா புகைந்து கொண்டேயிருக்கும். இங்குள்ள கடவுள் "ஆள்கொண்டார்" எனப்படுவார். யமனைக் காலின் கீழ்ப்போட்டு நசுக்கும் பாவனையாக விருக்கும் ஒரு பெரிய சிலை அவரைக் குறிக்கிறது.

4) சப்தஸ்தலக் கோ

கா சி



(படம் 4)—திருவையாறு பஞ்சநதேசுவரர் கோவில்.

மைல் தூரத்திலிருக்கும் திருமழபாடி யென்ற விடத்தி லுள்ள கடவுள் முன்னர் அவருக்குத் திருக்கலியாணம் நடந்தேறிய பிறகு அவரை ஊர்கோலமாக ஏழிடங்களுக் குக் கொண்டு சென்றார்களாம். கடைசியாகக் கொண்டு வந்து சேர்க்கப்பட்ட இடம் இது. மேற்கூறியுள்ள சம்ப வத்தைப் பிரதி வருஷமும் சித்திரை மாதத்தில் பதின் மூன்று நாளைய உற்சவமாகக் கொண்டாடி வருகிறார்கள்.

மேற்கூறிய உற்சவத்தைத் தவிர இன்னும் இரண்டு பெரிய உற்சவங்கள் இங்கு நடைபெறும். வைகாசி மாதத் தில் புனர்வசு நக்ஷத்திரம் கூடிய தினத்தில் வைசாக உற் சவம் ஆரம்பமாகும். சப்தஸ்தான உத்ஸவமெனப் பெயர். இது பத்து நாள் கொண்டாடப்படும் உற்சவம். ஆடி மாதத்தில் பரணி நக்ஷத்திரம் கூடிய தினத்தில் ஆடிப்பூர உற்சவம் ஆரம்பிக்கப்பட்டுப் பத்து நாள் நடைபெறும். மேற்கூறிய உர்சவங்களைப் பார்க்க வெகு ஜனங்கள் கூடு வார்கள்.

இங்குள்ள கோவில் ஒரு நேர்த்தியான பழைய கட்டி டம். மேலே கூறியுள்ள ஐந்து நதிகளின் காரணமாக இ கோவிலுக்குப் பஞ்சநதீசுவரர் கோவிலென்ற பெயரிடப் பட்டிருக்கிறது. நதிக்கரையில் அழகாக அமைக்கப்பட் டுள்ள கலியாணமஹால் என்ற இன்னொரு கட்டிடம் இங்கு விசேஷமானது. இதை ஏற்படுத்தியவர் சரபோஜி ம ராஜா. இவ்வூரில் ஸம்ஸ்கிருத, ஆங்கிலக் கலாசா ளிருப்பதுடன் ஒரு வேத பாடசாலையும் ஏற்பட்டி

கிறது. பிரக்கியாதி பெற்ற சங்கீத வித்வான்களாகிய தியாகய்யர், பட்டிணம் சுப்பிரமணிய அய்யர், மஹா வைத்திய நாதய்யர் முதலானோர்கள் இருந்த இடமும் இது.

இங்கு ஆள்கொண்ட பரதேசி யென்ற ஒரு பரதேசி பிரக்யாதி பெற்றிருந்தார். அவருக்கு அவரது பெ தெற்குவாயிலில் ஆள்கொண்ட மூர்த்திக் கெதிராக கார்ந்திருக்க வழக்கப்பட்டிருந் ததிலிருந்து வந்திரு வேண்டும். அவர் நிர்வாணமாகத் தானிருப்பார். நினை விடங்களில் வீடானாலும் சரி கடைகளானாலும் அவர் தாராளமாகப் புகுந்து வேண்டியதைச் சாப்பி விட்டோ எடுத்துக்கொண்டோ போய்விடுவது வழ மாம். அவர் வரப்போவதைச் சொல்வதில் சமர்த்தர ஏற்பட்டிருந்தாராம். கற்களை வீசி எறிந்து தூர்ப்பாஷ களால் நிந்திக்க வழக்கப்பட்டிருந்த காரணம்பற்றி அவ ஜனங்கள் அணுகுவது கஷ்டமாகவிருந்தது. அவர் அனேக சித்திகளைக் காட்டினார். தான் இறக்கப்போகும் நேரத்தை ஜனங்களுக்குக் கூறிவித்துத் தனக்குமுன் கூடும்படிசெய்து குறித்த நேரத்தில் தூமகுண்டத்திற் கருகில் உட்கார்ந்து தனது மண்டை தானாகவேவெடித்துப் போய்ப் பிராணன் போகும்படி செய்து கொண்டனராம்!

திருவாரூர் (திருவாழூர்) (Tiruvarur) :—இங்கு தென் இந்தியா இருப்புப்பாதையும் ஜில்லா போர்டு இருப்புப் பாதையும் சந்திக்கிறது. இது நாகப்பட்டணத்திற்குப் பதினைந்து மைல் தூரத்தில் மேற்கில் இருக்கிறது.

இங்குள்ள சிவன் கோவிலிலிருந்து இதற்குப் பிரக்யாதிவந்தது. இக்கோவில் மிக்க அழகுவாய்ந்த தென்றதுடன் மிகப் பரிசுத்தமான தெனவும் கருதப்பட்டிருக்கிறது. இக்கோவிலின் தேர் திருவாரூர்த் தேரென்று கூறும் பிரக்யாதிபெற்றது. இந்த ஜில்லாவில் இதைவிடப் பெரிதான தேர் எங்குமே இல்லை. இங்குள்ள கோவில் ஏற்பட்டதற்கு ஒரு புராணக் கதையுமுளது. ஒரு சமயத்தில் இந்திரன் சில ராக்ஷஸர்களது உபத்திரவத்தை சகிக்காமல் விஷ்ணுவினிடம் உதவிக்காகச் சென்றனனும், அவர் அவனிடம் இப்பொழுது திருவாரூரி லிருக்கும் தியாகராஜ ஸ்வாமி விக்கிரகத்தைக் கொடுத்தனராம். அந்த விக்கிரம் ஒரு ரக்ஷைபோல் ஏற்பட்டு அவனுக்கு ஜெயத்தைக் கொடுக்கும் சக்தி வாய்ந்தது. அதைக் கொடுத்தபொழுது விஷ்ணு, இந்திரன் அதை எக்காரணம் பற்றியும் கைவிடாது வைத்திருக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கூறியிருந்தனர். அச்சமயம் இந்திரன் வெற்றி பெற்ற போதிலும் பிந்தி மறுபடியும் ராக்ஷஸர்களுடன் போராட்டம் ஏற்பட, முசுகுந்த னென்ற நாமதேயம் வாய்ந்த திருவாரூர் அரசனை உதவி புரியுமாறு கேட்டனனும். அவ்வுதவிக்குப் பிரதியாகக் கேட்கும் வரத்தையும் கொடுக்கத் தயாராக விருப்பதாகக் கூறின இந்திரனிடமிருந்த தியாகராஜ ஸ்வாமி சிலையைக் கொடுக்கும்படி அவ்வரசன் கேட்க, இந்திரனும் அதைக் கொடுத்துத் தனது வார்த்தையைக் காப்பாற்றும்படி நேர்ந்ததாம். திருவாரூர் அரசனும் அச்சிலையைக் கோவிலில் ஸ்தாபிக்க இந்திரனும் பறையனாக ஜென்மமெடுக்கும்படி சபித்தக்

தண்டிக்கப்பட்டனன். இப்பொழுதுங்கூட உற்சவ காலங்களில் கடவுள் ஊர்கோலம் வருகையில் பறையன் ஒருவன் ஒரு வெள்ளைக் குடையைப் பிடித்துக் கொண்டு முதல் முதல் போகும் வழக்கம் அனுசரிக்கப்பட்டு வரக் காணலாம். வெள்ளைக் குடை இந்திரனது அங்கங்களில் ஒன்று. குடைபிடித்துச் செல்லும் பறையன் பறைசென்மமெடுத்திருந்த இந்திரன் மரபில் உதித்தவனெனக் கருதப்பட்டு வருகிறான்.

முசுகுந்த சக்ரவர்த்தி இவ்விடத்தில் தியாகராஜனைப் பிரதிஷ்டை செய்த விவர்மாவது :—

அந்நாட் டமிழ்க்குத் தூதுசென்ற ஆதிக்
   கடவு ளணி யாரூர்
பொன்னாட்டினுக்கு மதிகமென்று போந்தா
   ரிதன்மேற் புகழுமுண்டோ
எந்நாட்டினுக்கு மதிகமென்று மிதற்கா
   ருளரேற்ற மென்று
மன்னாட்டிய சீர் பெற்ற தன்றோ வளஞ்சேர்
   சோழ மண்டலமே.

தக்ஷிண தேசத்தைத் துலுக்கர் காலத்தில் அவர்களுக்குப் பயந்து கிழக்குத் திக்கில் கொண்டு போய் ஒளித்து வைத்திருந்து திரும்பக் கொண்டுவந்த தினத்தில் " பங்குனி உத்திரம் " வரக் கருங்கண்ணிவேள் என்பவர் தமது வீட்டின் முன்னர் அவ்வுத்சவத்தை நடத்தினாராம். இந்த இடம் இப்பொழுது ஒரு திடலாக இருப்பதாகத் தெரிகிறது.

மேழிக் கொடிசேர் கருங்கண்ணி வேளாண் முகப்பு
மேனிலமேற்
கேழிற்பயிலு முத்திரத்திற் கிளரா டரவக்
கிண்கிணிக் கால்
சூழப்பணிந்த தியாகருக்குச் சொல்லுந்தியாகஞ்
சொரிந் தோங்கும்
வாழ்விற் பெரியோன் குடிவாழ்வு வளஞ்சேர்
சோழ மண்டலமே.

கருணாகரன் என்பவன் கோயில் சுற்றுமதிலும் கீழக் கோபுரமும் சட்டி வைத்ததும், சோழராஜா பெருந்தகையும் கீழக் கோபுரத் திருப்பணி செய்ததும் :—

பூதம்பணியச் சீட்டெழுதிப் பொருளாய் லட்சம்
பொன் கொடுத்த
வேதும்பூத மங்கலவாழ் வுடையானீத
லுடையானே
காதல்சேரும் கடாரமெலாங் கண்ட கருணா கரப்
பெருமான்
மாதுபாகன் றிருப்பணிக்கே வைத்தார்
சோழ மண்டலமே.

*　　　*　　　*

கோட்டமுடையான் கீழக் கோபுரமு மதிலுங்
குறித்தமைத்தே
முட்டமுடையான் மகபூசை முழுதுமுடையான்
மொய்ம்புடையான்
பட்டமுடையான் காவிரிப்பூம் பதியு முடையான
பரிந்தருடை
வட்டமிழலிற் குளிந்ததன்றோ வளஞ்சேர்
சோழ மண்டலமே.

ஒரு காலத்தில் மகாவிஷ்ணு அசுரர்களை வெல்லும் பொருட்டுத் தமதுகையில் வில்லைவைத்துக்கொண்டு அதை வலதுகாற் பெருவிரலாலும், மோவாய்க் கட்டையாலும் பிடித்துக்கொண்டு நிற்கையில், அதில் பூட்டியிருந்த கயிறை அசுரர்கள் செல்லுருவங் கொண்டுவந்து தறித்து விட்டதினால் உடனே அதைக் கண்ட கமலை என்னும் லட்சுமி தமது நாயகருக்கு உதவிபுரிய வேண்டித் திருவாரூரை யடைந்து தவம் செய்ததுபற்றி இவ்வூருக்குக் "கமலாலய" மெனப் பெயரேற்பட்டது. பெரிய புராணத்தில் தெரிவிக்கப் பட்டிருப்பதாவது:—

சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னியாறு மதிபொழி செஞ்சடைச்
சென்னியார் திருவாரூர்த் திருநகர்.

இவ்வூர்க் கோவிலுக்கு உள்பிரகாரம் வெளிப்பிரகாரம் என்ற இரண்டு பிரகாரங்கள் உண்டு. மேற்கூறிய பிராகாரங்களின் கற்சுவர்களும் அழகு வாய்ந்தவைகள். வெளிப்பிராகாரச் சுவர்கள் நான்கிலும் மேலே கோபுரங்கள் ஏற்பட்டுள்ளவாயில்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. தென்மேற்கு மூலைக்கருகிலுள்ள தெற்குக் கோபுரவாயிலைத் தவிர்த்து மற்றவைகள் சுவர்களின் மத்தியில் அமைக்கப் பட்டிருக்கக் காணலாம். மேற்குக் கோபுரம் 101-அடி உயரம் வாய்ந்ததென்றும் கிழக்குக் கோபுரம் 108-அடி உயரம் வாய்ந்ததென்றும் கணக்கிடப் பட்டிருக்கிறது. சில காலத்திற்கு முந்தித்தான் அவைகள் பழுதுபார்க்கப்

பட்டன. வட கிழக்கு மூலையில் ஆயிரக்கால் மண்டப மென்ற ஒரு அழகிய மண்டப மிருக்கிறது. இக்கோவிலுக் குள் "சங்கதீர்த்தம்" என்ற பெயர் வாய்ந்துள்ள ஒரு கிணறு இருக்கிறது, "சித்திரா பௌர்ணமி" தினம் ஸ்நானம் செய்தால் எல்லா வியாதிகளும் சொஸ்தமாகு மென நம்புகிறார்கள்!

மனுச்சோழ ராஜாவின் மகன் வீதி விடங்கன் என்ற வன், ஒரு பசுவின் கன்றின்மீது தனது ரதத்தைத் தெரியா மல் ஏற்றிவிட அக்கன்று இறந்தது. அவ்விஷயம் இந்தக் கோவில் சிலாலிகிதங்களில் ஏற்பட்டிருப்பது மன்றிக் கிழக்கு வெளிக்கோபுரத் தருகிலும் சிலைகள் ரூபமாகக் காட்டப்பட் டிருக்கிறது. (படம் 5) இக்கோவிலின் மேற் புரமுள்ள குளத்தங்கரையில் சுந்தரமூர்த்தி நாயனருக்கு விருத்தாசலத்திலுள்ள மணிமுத்தா நதியில் போட்டுவிட்டு வந்த பொன்னை மாற்றுக் குறையாமல் அக்குளத்தி லிருந்து எடுத்துக் கொடுத்த "மாற்றுரைத்த விநாயக ரது" கோவி லிருக்கிறது. இங்குள்ள கோவிலின் இரண்டாவது பிராகாரத்து மேலைக் கோபுரமும் நாகரச ரென்றவரால் 1440-1441-வது வருஷங்களில் கட்டி வைக்கப்பட்டது. 1030-வது வருஷத்தில் ராஜேந்திர சோழன் காலத்தில் தியாகராஜரது சந்நதி கருங்கற்கள் கொண்டு கட்டிவைக்கப் பட்டது மன்னியில் மேற் கூறைக்கும் தங்கமுலா மிடப்பட்டது. தியாகராஜா இவ் விடத்தில் 364-லீலைகளைச் செய்திருந்ததாகக் கூறப்பட் டுளது.

காளமேகப் புலவர் திருவாரூரைப் பற்றிப் பாடியது:—

சங்குதீர்த்தந் திருச்சாளர வாயில் வீர
சிங்காசனந் திருவந்திக்காப்புப்—பங்குனிமா
ததிரு நாடீர்த்தந் திருவனைதன் கோயில்
உத்ரத பாகந் திருவாரூர்.



(படம் 5)—திருவாரூர்க் கல் ரதம்.

கும்பகோணம் (Kumbakonam) :—இவ்வூருக்குக் "குடமூக்கு" என்ற இன்னொரு பெயரும் உண்டு. இது கல்ப ஆரம்பத்தில் ஏற்பட்ட ஸ்தல மாதலால் இங்கு

பிரமாவுக்கும் கூட ஒரு கோவில் ஏற்பட்டிருக்கிறது. மதுரையை ஜெயித்த முதலாவது பராந்தகசோழன் 'பாண்டிப் படையார்' என்ற 3000-கழஞ்சு பொன் வரியை இவ்வூர் ஜனங்களிட மிருந்து வசூல் செய்து அதைக்கொண்டு தான் ஜெயித்த பாண்டிய நாட்டுச் சேனையைக் காப்பாற்றினதாகக் கூறப்பட்டுளது. எட்டாவது நூற்றாண்டில் பூர்வ மீமாம்சத்திற்கு வியாக்கியான மாகிய 'பிரபாகரம்' என்ற கிரந்தம் நாகேசுவரர் கோவிலில் கற்பிக்கப்பட்டு வந்ததாம்.

ஊருக் கருகில் காவேரி, அரசலாறு என்ற இரண்டு நதிகள் ஓடுகின்றன. இது ஒரு புராதன நகரமே ஆயினும் இதன் சரித்திரத்தைப் பற்றித் தெரிவது மிகவும் கொஞ்சமே. இவ்வூரில் அனேகம் பண்டைக் காலத்திய கோவில்களிருக்கின்றன. பன்னிரண்டு சிவாலயங்களும், நான்கு விஷ்ணு கோவில்களும் ஒரு பிரம்ஹாவின் கோவிலும் இவ்வூரி லிருப்பதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது. பிரம்ஹாவின் கோவில் அபூர்வ மாதலால் அது இங்கிருப்பது ஒரு விசேஷம்.

வைஷ்ணவர்கள் கோவில்களுள் சாரங்கபாணி கோவில் (படம் 6) விசேஷமானது. அதன் கோபுரம் பன்னிரண்டு அந்தஸ்துகளுடன் கூடியிருப்பதுடன் 147-அடி உயரம் வாய்ந்ததாகவு மிருக்கிறது. இக்கோபுரம் செங்கற்களால் கட்டப்பட்ட கோபுரமே. இந்த ஜில்லாவில் மற்ற விஷ்ணு கோவில்களைக் கட்டி முடித்ததாகக் கூறப்பட்டுள்ள நாயக் அரசர்களே இக்கோவிலையும் கட்டி வைத்திருக்கவேண்டும்.



(படம் 6)—தும்பகோணம் சாரங்கபாணி கோவில்.

விஷ்ணு கோவிலாகிய சக்கிரபாணி கோவில் ஸ்மசானத்திற் கருகிலிருக்கிறது. ஸ்மசானத்திலிருந்து எழும்புகிற தூமம் கடவுளுக்குப் பிரியமான தூமமெனநினைக்கிறார்கள். மேற்கூறிய ஸ்மசானத்திற்குச் "சக்கரப்படித்துறை" என்ற பெயர் ஏற்பட்டிருத்தல் மேற்கூறிய கோவிலிலிருந்தே யெனில் பொருந்தும். ஸ்ரீ ராமஸ்வாமி கோவில் நவராத்திரி உற்சவச் சிறப்பிற்குப் பெயர் போனது.

இங்குள்ள சிவன் கோவில்களே அதிகப் புராதனமானவைகளெனக் கூறலாம். அவைகளில் அநேகம் சோழ மன்னர்கள் காலத்தில் ஏற்பட்டிருக்கவும் கூடும். அவைகளுள் மிகப் பரிசுத்தமானதெனக் கருதப்படுவது கும்பேசுவரர் கோவில். அதற்கு 128-அடி உயரமுள்ள நேர்த்தியான கோபுர முண்டு. நாகேசுவரரது கோவிலின் அமைப்பு விசேஷமானது. வருஷத்தில் மூன்று தினங்களில் சூரியன் கோபுரத்திலுள்ள த்வாரங்களின் வழியாகச் சுவாமியின் மேலே பிரகாசிக்கிறான். அப்படிப் பிரகாசித்தல் கடவுளைச் சூரியன் பூசிப்பதைக் குறிக்கிறதெனக் கூறுகிறார்கள். கும்பகோணத்தில் விசேஷமான இன்னும் ஒன்று மஹாமஹக் குளம். இதைச் சுற்றிலும் அழகிய மண்டபங்கள் உண்டு. கும்பேசுவரரது மஹா மஹ உற்சவம் இதில்தான் முக்கியமாய் நடைபெறுவது. மஹாமஹ உற்சவம் பன்னிரண்டு வருஷங்களுக் கொருதரம் தான் வரும். அப்பொழுது நாலா பக்கங்களிலுமிருந்து திரள் திரளாக ஜனங்கள் இங்குவந்து கூடி இந்த மஹாமஹக் குளத்தில் ஸ்நானம் செய்துபோவார்கள். (படம் 7)

ஏனெனில் அப்பொழுது கங்கை ஜலம் இக்குளத்திற்கு வந்திருப்பதாக நினைத்து அவ்வாறு செய்கிறார்கள். 1523-1524-ல் விஜயநகர ஸமஸ்தான கிருஷ்ண தேவராயர் இவ்வூரில் நடந்தேறின மஹாமஹ உற்சவத்திற்கு வந்திருந்தனர் என்ற விஷயமும் ஏற்பட்டுளது. சென்ற மஹாமஹம் 1921-வருஷம் பிப்ரவரி மாதம் 22-ந்தேதி வந்தது.

ஸ்மார்த்தர்களுக்கு விசேஷமான சங்கராசாரியார் மடம் இங்கு ஏற்பட்டுளது. 1729-ல் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரியாரது காலத்திலேயே தஞ்சாவூர் அரசன் பிரதாபஸிம்மனால் அது இவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஏனெனில் அப்பெரியவர் தனது நாட்டில் வசித்திருக்க வேண்டுமென்று அதைச் செய்தனனும். முன்னர் காஞ்சியிலிருந்த இந்த மடத்தை 1729-வருஷத்தில் சென்னை பிரதேசங்களில் இங்கிலீஷ்காரர்களுக்கும் துலுக்கர்களுக்கும் நேரிட்ட சண்டையில் இந்துக்களுக்கு உபத்திரவம் நேரிட்டது. அதன் காரணமாக இம்மடத்தை உடையார்பாளையம் ஜமீன்தார் அவ்விடத்திற்கு மாற்றிக் கொண்டார். ஆனால் பிரதாபஸிங் மஹாராஜா தமது தஞ்சையிலிருக்கவேண்டி அவ்விடமழைத்துச் சென்றனர். ஆனால் காவேரி தீரத்திலிருக்க ஆசாரியார் சுவாமிகள் விரும்ப அப்பொழுதைய மந்திரி டபீர்பண்டு என்பவர் இவ்விடத்தில் தற்காலமுள்ள கட்டிடத்தை ஏற்படுத்தி அதில் அம்மடத்தை ஏற்படுத்தினர்.

தென் இந்தியாவிலே படிப்பிற்குப் பெயர் பே[illegible] கும்பகோணம். சென்னைக்குவெளியில் இங்குள்ள ச[illegible]

கல்லூரியே சிறந்த கல்லூரி யெனக் கொள்ளல் வேண்டும். இங்கிலாந்தில் கேம்பிரிட்ஜ் (Cambridge) என்ற விடம் போன்றது தென் இந்தியாவில் இவ்வூரெனக் கூறியுள்ளர்.

கும்பகோணத்திற்கு வடமேற்கிலுள்ள திருப்புறம்பியம் என்னு மிடத்தில் 862-863-ல் வரகுண பாண்டியனுக்கும் கங்கபல்லவ அரசனுகிய அபராஜித விக்கிர வர்மனுக்கும் சண்டை நடந்து அதில் பாண்டிய மன்னன் தோல்வி அடைந்தனன்.

நாகப்பட்டணம் (Negapatam) :—இது ஒரு முக்கியமான துறைமுகப்பட்டணம். இதற்கு இப்பெயர் வந்ததற்குக் காரணம் நாகமரபினர்களால் ஸ்தாபிக்கப்பட்ட காரணம் பற்றி போலும். கீழ்கரையில் போர்த்துக்கேசியர்கள் ஏற்படுத்திக் கொண்ட ஆரம்ப இருப்பிடங்களில் இது ஒன்று. இங்கிருந்த பழைய கோட்டையின் அடையாளங்கள் இப்பொழுதும் இங்கு காணப் படுகின்றன. 1869-வது வருஷத்தில் இங்கு 80-அடி உயரமுள்ள ஒரு தீபஸ்தம்பம் கட்டப்பட்டது.

டச்சுக்காரர்கள் இவ்வூரி லிருந்ததற் கறிகுறியாக ஏற்பட்டிருக்கும் சின்னங்கள் இங்கு விசேஷம். ரயில் ஸ்டேஷனுக் கருகிலுள்ள டச்சுக்காரர்களது மாதா கோவிலில் ஒரு விசித்திரமான புராதனமேடை ஏற்பட்டிருக்கிறது. தவிரவும் இன்னும் சில அறிகுறிகளும் லிகிதங்களும் காணப்படுகின்றன.

பண்டைகாலத்திய டச்சுக் காரர்களது இடுகாடு விசேஷமானது. பிணங்கள் புதைத்திருக்கு மிடங்களின் மேல் கட்டப் பட்டிருக்கும் கட்டிடங்களும, அவைகளில் ஏற்பட்டிருக்கும் விகிதங்களும் விசேஷ மானவைகள் உலாந்தா (Holland) நாட்டிலிருந்து வேலைசெய்துகொண்டு வரப்பட்ட கற்கள் அக்கட்டிடங்களில் பதிக்கப்பட் டிருக்கின்றவாம்.

படிப்பில் நாகப்பட்டணம் சிறந்ததெனவே கொள்ளல் வேண்டும்; தஞ்சாவூர், கும்பகோணத்திற்கு அடுத்த படியாகச் சொல்லலாம்.

இவ்வூரில் காயாரோகண ஸ்வாமி கோவில் விசேஷமானது. "பெரிய புராணத்தில்" இது நாகைக் காரோணமெனக் கூறப்பட் டிருப்பதுடன் சிலா விகிதங்களில் அவ்வாறே கூறப்பட்டுளது. நீலாயதாக்ஷி அம்மன் கோவிலில் அம்மன் அலங்கரிக்கப் படுவது விசேஷம்.

ஒரு சமயத்தில் நாகபட்டணம் பௌத்த மதஸ்தர்களது பலமான இடமாக ஏற்பட்டிருந்தது. சைவ மதத்தைச் சேர்ந்த முதலாவது ராஜராஜன் ஆனைமங்கலம் என்ற கிராமத்தை நாகப்பட்டிணத்திலிருந்த புத்தர் கோவிலுக்குக் கொடையாக அளித்திருந்த தாகவும், முதலாவது குலோத்துங்கனும் அத்தகைய இரண்டொரு இடங்களுக்குக் கொடைகள் அளித்திருந்த தாகவும் கூறியுளர். செயிண்ட் ஜோஸெப் கல்லூரி கட்டப்பட்ட பொழுது ஒரு புராதனமான கோபுரம் இடிக்கப்பட்டதாம். அது மேற் கூறியுள்ள பௌத்தரது இரண்டு கோவில்களுள்

ஒன்றின் பாகமெனக் கருதப்பட்டிருக்கிறது, வைஷ்ணவ சந்நியாசியாகிய திருமங்கை ஆழ்வார் நாகபட்டணத்தில் புத்தரது கோவிலிலிருந்த ஒரு தங்க விக்கிரகத்தைக் கொண்டு சென்று அத்தங்கத்தினால் ஸ்ரீரங்கம் கோவில் விமானத்திற்கு உபயோகித்தனராம்.

இவ்வூருக்குச் "சோழகுலவல்லி பட்டண" மென்ற இன்னொரு பெயரும் உண்டு. இவ்விடத்தில் முதலாவது ராஜராஜன் காலத்தில் அவரது ஆளுகைக்குக் கீழ்ப்பட்டிருந்த பர்மா தேசத்திய அரசனாகிய சூளாமணி வர்மன் ஒரு கோவில் கட்டி வைத்தானாம். அக்கோவில் பௌத்த மதத்தினர்களது கோவில். அப் பௌத்த ஆலயத்திற்குத் தான் ராஜராஜன் என்ற சோழ மன்னன் ஆனைமங்கல மென்ற பெயர் வாய்ந்திருந்த கிராமத்தைக் கொடையாகக் கொடுத்தான்.

நாகூர் நாகபட்டணத்திற்கு நான்கு மைல் வடக்கிலுள்ளது. இவ்விடத்தில் 400-வருஷங்களுக்கு முந்தி ஏற்பட்ட "துலுக்கர் தர்க்கா" விசேஷமானது.

தரங்கம்பாடி (Tranquebar) :—இப்பதம் "அலைக் கிராம" மெனப் பொருள்படும். இது தென் கிழக்காக மாயவரத்திற்குப் பத்தொன்பது மைல் தூரத்தில் சமுத்திரக்கரை நகரமாக ஏற்பட்டுளது. இது புராதன டேனிஷ் வாஸஸ்தலம். ஒரு சமயம் முக்கியமான துறைமுகமாகவும் கலெக்டர் தலைமை ஸ்தானமாகவும் ஏற்பட்டிருந்தது. இது இப்பொழுது ஒரு சிறிய ஊர்தான். சிறுவர்களுக்கான

கலாசாலைகளும் சிறுமிகளுக்கான கலாசாலைகளும் உபாத்தியாயர்களாக விரும்புவோர்களுக்குப் போதனை முறை பழக்கிவைக்கப்படும் கலாசாலை (Training School) ஒன்றும் இங்கிருக்கக் காணலாம். இவ்வூரைச்சுற்றி ஒருசெங்கல் சுவர் ஏற்பட்டுளது. இச்சுவர் ஒரு கோட்டை யிருந்ததின் அறிகுறி.

தரங்கம்பாடியிலுள்ள டேனிஷ்காரர்களது கோட்டை ?20-வது வருஷத்தில் ஓவிகெட்டி (Ove-Gedde) ற ஒருவனால் டேனிஷ் ஈஸ்டு இந்தியா கம்பெனியாருக் ..கக் கட்டிமுடிக்கப்பட்டது. முந்திய தடவை ஒன்றில் ரோலண்டுகிரேப் (RoelantCrape) என்ற கப்பல் தலைவன் கம்பெனியினது கப்பல் உடைந்துபோன காரணம்பற்றி அரசனது கச்சேரிக்குச்சென்று நாயக்கரது ஆதரணையைப் பெற்றிருந்தனராம். பிறகு அவன் அரசனிடமிருந்து ஐந்து மைல் நீளமும், மூன்று மைல் அகலமும் வாய்ந்த இடத்தை 3111-ரூபாய் வாடகைக்குப்பெற்று அதில் டேனிஷ்காரர் தங்குமிடம் ஏற்படுத்தினனும். இந்த வேலையில் கிரேப் என்றவரும் கெட்டி என்றவரும் பிரயாசை எடுத்துக் கொண்டார்கள். பிறகு 1624-ல் இந்தக் கோட்டை டென்மார்க்கு தேசத் தரசன தாயிற்று கம்பெனிக்காரர்கள் அவனுக்குப் பணம் கொடுக்கவேண்டி யிருந்ததால் அது அவனுக்குச் சேர 1845-வது வருஷம் வரையில் அது அவனதாகவே இருந்து வந்தது. பிறகு அது இங்கிலீஷ் ஈஸ்டு இந்தியா கம்பெனியர்ருக்குக் கொடுத்துவிடப் பட்டது.

விசேஷ இடங்கள்

டென்மார்க்கு தேசத்தவர்கள் இங்குள்ள பெரியகோவிலையும் மற்றப் பொது ஸ்தலங்களையும் அலங்கரிக்க நாயக்கர்களுக்கு உதவிபுரிந்த விஷயம் ஏற்படுகிறது. 1706-வது வருஷத்தில் தரங்கம்பாடியில் முதல் முதல் இந்தியாவிலேயே பிராட்டஸ்டாண்ட் மிஷன் (Protestant Mission) ஏற்படுத்தப்பட்டது. 1755-வது வருஷத்திற்குள் டேனிஷ் நாட்டின் பெரும்பாகம் சமுத்திர வெள்ளத்தால் அடித்துக் கொண்டுபோய் விடப்பட்டது. இவ்விடத்தில் அலை உக்கிரமாக ஸதா மோதிக்கொண்டிருக்குமாதலால் அவ்வாறு நேர்ந்தது. தஞ்சாவூர் அரசனைத் தங்களது இருப்பிடத்தை அதிகரித்துக்கொள்ள நிலம் கொடுக்கும்படி கேட்டார்கள். அவன் கொடுக்க மறுதளித்ததால் சச்சரவு ஏற்பட்டது. டேனிஷ் ஜாதியார் அரசனது உத்தியோகஸ்தர்கள் முரட்டுத்தனமாய் நடந்துகொண்டு தங்களைத் தூஷித்திருந்ததாகக் கூறி அந்தச் சாக்கை முன்னிட்டு அருகிலிருந்த இரண்டு கோவில்களை எதிர்த்தார்கள். ஒன்றைப் பிடித்துக்கொண்டு மற்றதை நோக்கிச் சென்றுகொண்டிருக்கையில் தஞ்சாவூரிலிருந்து வந்த சைனியத்தினால் எதிர்க்கப்பட்டுக் கோட்டைக்குள் ஓடி ஒளிந்துகொள்ள நேர்ந்தது. சென்னை கவர்ண்மெண்டார் மத்தியஸ்தத்தின்மேல் பிறகு சமாதானம் ஏற்பட்டது. இச்சமயத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இங்கிலீஷ்காரர்களுக்கும் நேர்ந்த சண்டையில் இரு கக்ஷிக்காரர்களும் தரங்கம்பாடியில் இறங்கிவந்து கொண்டிருந்தார்கள். 1776-வது வருஷத்தில் டேனிஷ் கவர்னர் தஞ்சாவூரிலிருந்து அகற்றப்படுமுன் போர்ச் சாமான்கள் கொடுக்கும்படி நவாபி

கேட்டனுப்பப்பட்டார். ஆனால் அந்தச் சாமான்கள் வந்து சேரு முன்னமே நவாப்பின் கையிலிருந்து தஞ்சாவூர் போய்விட் டிருந்ததால் அவைகள் 1780-வது வருஷம் வரையில் உபயோகப்படவில்லை. இந்நாட்டிற்கு வந்ததும் மேற்கூறிய சங்கதியைக்கேட்ட ஹைதர் தனது சத்துருக் களுக்கு உதவிபுரிந்த காரணம்பற்றி டென்மார்க் தேசத் தவர்களைத் தரங்கப்பாடியி லிருந்தும் துரத்திவிடுவதாகப் பயமுறுத்தினான். அவன் அப்படிச் செய்யாமலிருந்த தற்குக் காரணம் அவர்கள் 14000-பவுன் கொடுத்ததினா லேயே. நவாப் அனுப்பிய போர்ச் சாமான்களின் கிரயம் 1303-வது வருஷம் வரையில் கொடுபடாமலே யிருந்தது. தரங்கம்பாடி டேனிஷ் ஜாதியார்களிடமிருந்து இங்கிலீஷ் காரர்களால் 1801-வது வருஷத்தில் எடுத்துக் கொள்ளப் பட்டு 1815-வது வருஷம் வரை அவர்களது சுவா தீனத்திலேயே இருந்து வந்தது. கடைசியாக அது இங்கி லீஷ்காரர்களுக்குப் பன்னிரண்டரை லக்ஷம் ரூபாய்க்கு விற்கப்பட்டது.

இங்குள்ள இன்னொரு கட்டிடம் டான்ஸ்போர்க் (Dansborg) என்ற சிறிய கோட்டை. சரித்திர காலத்தில் இவ்வூரிலேயே பந்தோபஸ்துள்ள பாகம் இதுவாகவே யிருந்திருக்க வேண்டும்.

இங்குள்ள புராதன ஹிந்துக்களது கட்டிடம் ஒரு வன் கோவில். இதன் சில பாகம் சமுத்திரத்தால் அடித் க் கொண்டு போகப்பட்டிருக்கிறது. பாண்டிய அரசன் லசேகரன் என்றவனது சிலாலிகிதம் இக்கோவில் காணப் டுவதில் இந்நகர் "சதங்கம்பாடி" எனக் கூறப்பட்டுள்ளது.

காவேரிப்பட்டினம் (Kaveripatam) :— சீயாழித் தாலூகாவின் தென்கிழக்கு மூலையில் காவேரி நதியின் முகத்துவாரத்திலுள்ள ஒரு சிறிய ஊர் இது. காவேரிப் பட்டினத்திற்கு புகார், சங்கமுகம் என்ற பெயர்களும் உண்டு. ஒரு காலத்தில் தென்வடலில் பத்து மைலும் கிழ மேலில் பத்து மைலும் விஸ்தீரணம் வாய்ந்திருந்த ஊராக விருந்ததாம். ஒரு காலத்தில் இது சோழ ராச்சியத்தில் முக்கியமாக விருந்து கரிக்கால் சோழனால் இது பலப்படுத்தப்பட்டு அவனது ராஜதானியின் பிரதான நகரமாகச் செய்து கொள்ளப் பட்டிருக்கவேண்டும். இது காவேரி நதியின் கரையில் கட்டப்பட்டிருக்கின்றது. கரிக்கால் சோழனது காலத்தில் அது வேண்டிய ஆழமுள்ளதாக விருந்து நன்கு பாரமேற்றப்பட்ட கப்பல்கள் தங்கு தடையின்றிப்போகக் கூடியதாக விருந்தது.

இவ்வூரில் இரு பாகங்க ளிருந்தன. ஒன்று சமுத்திரக் கரைக் கருகிலுள்ள "மருவூர்ப்பாக்கம்", மற்றது மேற்கிலுள்ள "பட்டினப்பாக்கம்." இவைகளுக்கிடையில் ஒரு திறந்தவெளி ஒழுங்காகக் குறிப்பிட்ட தூரங்களில் பயிர் செய்யப் பட்டிருக்கும் மரங்களுடனிருந்ததாம். அவ்வெளியில் தான் பெரியசந்தை கூடுவது. பணக்காரர்கள் பட்டினப் பாக்கத்தில் வசித்தார்கள். இங்குதான் அரசனது அரண்மனை யிருந்தது. அவ்வரண்மனையைச் சுற்றி மான் முதலிய பிராணிகள் திரியும்படியான நந்தவனம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. மருவூர்ப்பாக்கத்தில்தான் சகலவிதமான தொழிலாளிகளும் இருந்தனர். ஐரோப்பிய வர்த்தகர்களும்

அங்குதா னிருந்தார்கள். இவ்விடத்தில்தான் பிரக்யாதி பெற்ற பட்டினத்துப் பிள்ளை பிறந்தனர். நாட்டுக்கோட்டைச் செட்டிகளும், திரிச்சிணுப்பள்ளி பன்னிரண்டாம் செட்டிகளும் அவர்களது முன்னோர்களும் இவ்விடத்தில் தான் வந்து தங்கினர்களாம்.

இவ்வூர் காவேரிநதி சமுத்திர சங்கமமாகு மிடமென்ற காரணம்பற்றிப் புண்ணியதீர்த்தம் கூடியுள்ள விடமெனக் கருதப்பட்டு வருகிறது. இங்கு சமுத்திர ஸ்நானம் செய்ய அனேகம் யாத்திரிகர்கள் வருகிறார்கள்.

இவ்வூரில் ஐந்து முக்கிய கட்டிடங்கள் இருந்ததாகச் கூறப்பட்டுளது. இவைகளின் விவரங்கள் "பட்டினப்பாலை," "சிலப்பதிகாரம்" இவ்விரண்டு நூல்களிலும் காணலாம்,

காரைக்கால் (Karaikal) :—இது தஞ்சாவூர் ஜில்லாவில் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான இடம். பட்டணத்திற்கு வடக்கில் பத்து மைல் தூரத்தில், அ லாற்றின் முகத்துவாரத்தில் அமைக்கப் பெற்றுள அதைச் சுற்றிலுமுள்ள பிரெஞ்சுக்காரர்களது நாடு பதி மூன்று மைல்தூரம் நீளமும் அதைவிடக் குறைவான தூ ஒரே அளவில்லாத அகலமும் வாய்ந்துள்ள இடம்.

இங்குள்ள அரசலாறு ஊரின் தெற்கில் ஓடுகிறது இதில் நல்ல துறைமுகங்கள் ஏற்பட்டுள்ளன. அத் துறை முகங்களில் கருங்கல்லினல் கட்டப்பட் டிருக்கும் ஏற்

மதி, இறக்குமதித் துறைகளும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இங்கிருந்து கப்பலேற்றி அனுப்பப்படும் சாமான்கள் அரிசி, நெல், தேங்காய் எண்ணெய், எள், கயிறு முதலியன. இறக்குமதியாகும் சாமான்கள் சர்க்கரை, கட்டடங்கள் கட்ட யோக்கியமான மரங்கள், சந்தனக்கட்டை, பிரெஞ்சு தேசத்திய சாமான்கள், சாராயங்கள் முதலியன.

இவ்வூரில் சில சர்க்கார் கட்டிடங்களும் ஒரு துறைமுகமுமிருக்கின்றன. இங்கு சர்க்கார் அலுவல் நடத்தும் அதிகாரி புதுச்சேரியிலிருக்கும் பிரெஞ்சு கவர்னருக்குக் கீழ்ப்பட்டவர். இப்பிராந்தியம் மிக்க செழுமை வாய்ந்தது. இதற்குப் பாசனமாக ஏற்பட்டுள்ள நதிகள் காவேரியாற்றின் ஏழு கிளை நதிகள். அவையாவன:—(1) நண்டலாறு, (2) நாட்டாறு, (3) அரசலாறு, (4) திருமலைராஜன் ஆறு, (5) முடிகொண்டான் ஆறு, (6) வாஞ்சிஆறு, (7) நூலாறு.

இவ்வூர் சில வருஷகாலம் இங்கிலீஷ்காரர்களது ஆதீனத்திலிருந்து 1765-வது வருஷத்தில் பிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பித் தரப்பட்டது. ஆயினும் 1778-வது வருஷத்தில் திரும்பவும் பிடித்துக் கொள்ளப்பட்டு, 1814-வது வருஷம் வரையில் பிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படவில்லை. பிறகு அது அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப் பட்டபொழுது அவர்கள் அங்கு கோட்டை கொத்தளங்கள் கட்டவாவது போலீஸ் பந்தோபஸ்துக்கு வேண்டிய அளவுக்கு மிஞ்சி ராணுவம் வைத்துக் கொள்ளவாவது கூடாதென்ற நிபந்தனையுடன் கொடுக்கப் பட்டதாம்.

1815-வது வருஷத்திய ஓர் உடன்படிக்கையின் படி பிரெஞ்சுக்காரர்களுக்கும், இங்கிலீஷ்காரர்களுக்கும் யுத்தம் நேரிடுங்கால் அத்தகைய இடங்களை யாதொரு தங்கடையும் ஏற்படுத்தாது காலிசெய்து விடவேண்டிய நிபந்தனை ஏற்பட்டுளது. தவிரவும் சிவில், கிரிமினல் கோர்ட்டுகளின் தீர்ப்பை நிராகரித்துச் சென்று அவ்விடங்களில் தஞ்சம் புகும் ஜனங்களை இரு கக்ஷிக்காரர்களும், எதிர்க்கக்ஷிக்காரருக்கு ஒப்புக் கொடுத்து விடவேண்டியதென்றும் ஏற்பட்டுளது. ஆனால் தற்சமயம் இரு கக்ஷிக்காரர்களது சம்மதத்தின் மேல் சிவில் விஷயமாய் மேற்கூறியவாறு தஞ்சம் புகுந்த பெயர் வழிகளை அப்படி ஒப்புக்கொடுக்காது சர்க்கார் சம்பந்தமில்லாத குற்றங்கள் செய்த பெருத்த குற்றவாளிகளை மாத்திரம் ஒப்புக்கொடுத்தால் போதுமெனத் தீர்மானித்து அவ்வாறு நடந்து வருகிறார்கள்.

———:o:———

Standard Press, Triplicane, Madras.